உ

சிவமயம்.

கானப்பேரென்னும்

# காளையார்கோவிற்

# புராணவசனம்.

இஃது

தஞ்சைமாநகரம், சதாவதானம்

பிரமஸ்ரீ

சுப்பிரமணிய ஐயரவர்களால்

இயற்றப்பட்ட

புராணச் செய்யுட் கிணங்கத்

தேவகோட்டை ஜமீன்தார்

ம-ா-ா-ஸ்ரீ, அள. அரு.

இராமசாமிச் செட்டியாரவர்கள்

விருப்பத்தின்படி

எழுதப்பெற்று

சென்னை:

கல்ரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1897ஆ



திருச்சிற்றம்பலம்.

திருக்கானப்பேர் என்னும்

காளையார்கோவில்

# தேவாரப்பதிகங்கள்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பிடியெலாம்பின்செலப்பெருங்கைமாமலர்தழீஇ
விடியலேதடமூழ்கிவிதியினல்வழிபடுங்
கடியுலாம்பூம்பொழிற்கானப்பேரண்ணனின்
னடியலாலடைசரணுடையரோவடியரோ. (க)

நுண்ணிடைப்பேரல்குனூபுரமெல்லடிப்
பெண்ணினல்லாளையோர்பாகமாப்பேணினன்
கண்ணுடைநெற்றியான்கருதியகானப்பேர்
விண்ணிடைவேட்கையார்விரும்புதல்கருமமே. (உ)

வாவிவாய்த்தங்கியநுண்சிறைவண்டினங்
காவிவாய்ப்பண்செயுங்கானப்பேரண்ணலை
நாவிவாய்ச்சாந்துளும்பூவுளுஞானநீர்
தூவிவாய்ப்பெய்துநின்றூட்டுவார்தொண்டரே. (ங)

நிறையுடைநெஞ்சுளுநீருளும்பூவுளும்
பறையுடைமுழவுளும்பலியுளும்பாட்டுளுங்
கறையுடைமிடற்றண்ணல்கருதியகானப்பேர்
குறையுடையவர்க்கலாற்களைகிலார்குற்றமே. (௪)

ஏனப்பூண்மார்பின்மேலென்புபூண்டீறிலா
ஞானப்பேராயிரம்பேரினானண்ணிய
கானப்பேரூர்தொழுங்காதலார்தீதிலர்
வானப்பேரூர்புகும்வண்ணமும்வல்லரே. (௫)

பள்ளமேபடர்சடைப்பாற்படப்பாய்ந்தநீர்
வெள்ளமேதாங்கினான்வெண்மதிசூடினான்
கள்ளமேசெய்கிலார்கருதியகானப்பே
ருள்ளமேகோயிலாவுள்குமென்னுள்ளமே. (௬)

மானமாமடப்பிடிவன்கையாலலகிடக்
கானமார்கடகரிவழிபடுங்கானப்பே
ரூனமாமுடம்பினிலுறுபிணிகெடவெண்ணின்
ஞானமாமலர்கொடுநணுகுதனன்மையே. (௭)

வாளினான்வேலினான்மால்வரையெடுத்ததிண்
டோளினானெடுமுடிதொலையவேயூன்றிய
தாளினான்கானப்பேர்தலையினால்வணங்குவார்
நாளுநாளுயர்வதோர்நன்மையைப்பெறுவரே. (௮)

சிலையினான்முப்புரந்தீயெழச்செற்றவ
னிலையிலாவிருவரைநிலைமைகண்டோங்கினான்
கலையினார்புறவிற்றேன்கமழ்தருகானப்பேர்
தலையினால்வணங்குவார்தவமுடையார்களே. (௯)

உறித்தலைச்சுரையொடுகுண்டிகைபிடித்துச்சி
பறித்தலும்போர்த்தலும்பயனிலைபாவிகாண்
மறித்தலைமடப்பிடிவளரிளங்கொழுங்கொடி
கறித்தெழுகானப்பேர்கைதொழல்கருமமே. (௰)

காட்டகத்தாடலான்கருதியகானப்பேர்
கோட்டகத்திளவரால்குதிகொளுங்காழியா
னாட்டகத்தோங்குசீர்ஞானசம்பந்தன
பாட்டகத்திவைவலார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ்
சூதனமென்முலையாள் பாகமுமாகிவரும்
புண்டரிகப்பரிசாமேனியும்வானவர்கள்
பூசலிடக்கடனஞ்சுண்டகருத்தமருங்
கொண்டலெனத்திகழுங்கண்டமுமெண்டோளுங்
கோலநறுஞ்சடைமேல்வண்ணமுங்கண்குளிரக்
கண்டுதொழப்பெறுவதென்றுகொலோவடியேன்
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௧)

கூதலிடுஞ்சடையுங்கோளரவும்விரவுங்
கொக்கிறகுங்குளிர்மாமத்தமுமொத்துனதா
ளோதலுணர்ந்தடியாருன்பெருமைக்குநினைந்
துள்ளுருகாவிரசுமோசையைப்பாடலுநீ
யாதலுணர்ந்தவரோடன்புபெருத்தடியே
னங்கையின்மாமலர்கொண்டென்கணதல்லல்கெடக்
காதலுறத்தொழுவதென்றுகொலோவடியேன்
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௨)

நானுடைமாடெனவேநன்மைதரும்பரனை
நற்பதமென்றுணர்வார்சொற்பதமார்சிவனைத்
தேனிடையின்னமுதைமற்றதனிற்றெளியைத்
தேவர்களுயகனைப்பூவுயர்சென்னியனை
வானிடைமாமதியைமாசறுசோதியனை
மாருதமும்மனலும்மண்டலமும்மாய
கானிடைமாநடனென்றெய்துவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௩)

செற்றவர்முப்புரமன்றட்டசிலைத்தொழிலார்
சேவகமுந்நினைவார்பாவகமுந்நெறியுங்
குற்றமிறன்னடியார்கூறுமிசைப்பரிசுங்
கோசிகமும்மணியிற்கோவணமும்மதளு
மற்றிகழ்திண்புயமுமார்பிடைநீறுதுதை
மாமலைமங்கையுமைசேர்சுவடும்புகழக்
கற்றனவும்பரவிக்கைதொழலென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௪)

கொல்லைவிடைக்கழகுங்கோலநறுஞ்சடையிற்
கொத்தலரும்மிதழித்தொத்துமதனருகே
முல்லைபடைத்தநகைமெல்லியலாளொருபான்
மோகமிகுத்திலகுங்கூறுசெயொப்பரிசுந்
தில்லைநகர்ப்பொதுவுற்றாடியசீர்நடமுந்
திண்மழுவுங்கைமிசைக்கூரெரியும்மடியார்
கல்லவடப்பரிசுங்காணுவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௫)

பண்ணுதலைப்பயனார்பாடலுநீடுதலும்
பங்கயமாதனையார்பத்தியுமுத்தியளித்
தெண்ணுதலைப்பெருமானென்றெழுவாரவர்த
மேசறவும்மிறையாமெந்தையையும்விரவி

நண்ணுதலைப்படுமாறெங்ஙனமென்றயலே
 நைகிறவென்னைமதித்துய்யும்வணம்மருளுங்
கண்ணுதலைக்கனியைக்காண்பதுமென்றுகொலோ
 கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௬)

மாவையுரித்ததள்கொண்டங்கமணிந்தவனை
 வஞ்சமனத்திறையுநெஞ்சணுகாதவனை
மூவருருத்தனதாமூலமுதற்கருவை
 மூசிடுமால்விடையின்பாகனையாகமுறப்
பாவகமின்றிமெய்யேபற்றுமவர்க்கமுதைப்
 பானறுநெய்தயிரைந்தாடுபரம்பரனைக்
காவலெனக்கிறையென்றெய்துவதென்றுகொலோ
 கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௭)

தொண்டர்தமக்கெளியசோதியைவேதியனைத்
 தூயமறைப்பொருளாநீதியைவார்கடனஞ்
சுண்டதனுக்கிறவாதென்றுமிருந்தவனை
 யூழிபடைத்தவனோடொள்ளரியும்முணரா
வண்டனையண்டர்தமக்காகமநூன்மொழியு
 மாதியைமேதகுசீரோதியைவானவர்தங்
கண்டனையன்போடுசென்றெய்துவதென்றுகொலோ
 கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௮)

நாதனைநாதமிகுத்தோசையதானவனை
 ஞானவிளக்கொளியாமூனுயிரைப்பயிரை
மாதனைமேதகுதன்பத்தர்மனத்திறையும்
 பற்றுவிடாதவனைக்குற்றமில்கொள்கையனைத்
தூதனையென்றனையாடோழனைநாயகனைத்
 தாழ்மகரக்குழையுந்தோடுமணிந்ததிருக்
காதனைநாயடியேனெய்துவதென்றுகொலோ
 கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௯)

கன்னலையின்னமுதைக்கார்வயல்சூழ்கானப்
 பேருறைகாளையையொண்சீருறைதண்டமிழா
லுள்ளிமனத்தயராவுள்ளுருகிப்பரவு
 மொண்பொழினாவலர்கோனாகியவாரூரன்
பன்னுமிசைக்கிளவிபத்திவைபாடவல்லார்
 பத்தர்குணத்தினராயெத்திசையும்புகழ
மன்னியிருப்பவர்கள்வானினிழிந்திடினு
 மண்டலநாயகராய்வாழ்வதுநிச்சயமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்தி நாயனார் இராமேச்சுரத்தை நீங்கித் திருச்சுழியலிலே போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு, அங்கேயிருக்க; சுவாமி அவருக்குச் சொப்பனத்திலே காளைவடிவங்கொண்டு கையிலே பொற்செண்டும் முடியின்மேல் சுழியமும் உடையவராகித் தோன்றி, "நம்முடைய வாசஸ்தானம் கானப்பேர்" என்று சொல்லி மறைந்தருளினார். நாயனார் விழித்தெழுந்து, திருவருளை வியந்து, தாங் கண்ட சொப்பனத்தைத் தம்மோடுகூட வந்திருக்கின்ற சேரமான் பெருமானாயனாருக்குத் தெரிவித்து, திருச்சுழியலை நீங்கி, "தொண்டரடித் தொழலும்" என்று எடுத்து, "கண்டுதொழப்பெறுவ தென்றுகொலோ வடியேன் கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே" என்று திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கானப்பேருக்குப்போய், சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடியருளினார்.

திருக்கானப்பேர்த் திருப்பதிகம்-உ

சுவாமிதிருநாமம் - காளையப்பர்.

தேவிதிருநாமம் - சுவர்ணவல்லி.

திருச்சிற்றம்பலம்.

உ

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பொது

### திருக்ஷேத்திரக்கோவை

பண் - இந்தளம்.

ஆரூர்தில்லையம்பலம்வல்லநல்லம்
வடகச்சியுமச்சிறுபாக்கநல்ல
கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணி
கடல்சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார்
நீரூர்வயனின்றியூர்குன்றியூருங்
குருகாவையூர்நாரையூர்நீடுகானப்
பேரூர்நன்னீள்வயனெய்த்தானமும்
பிதற்றாய்பிறைசூடிதன்பேரிடமே.

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

பொது

### பாவநாசத்திருப்பதிகம்.

பண்-பழம்பஞ்சுரம்.

ஆனைக்காவிலணங்கினையாரூர்நிலாயவம்மானைக்
கானப்பேரூர்க்கட்டியைக்கானூர்முளைத்தகரும்பினை
வானப்பேரார்வந்தேத்தும்வாய்மூர்வாழும்வலம்புரியை
மானக்கயிலைமழகளிற்றைமதியைச்சுடரைமறவேனே.

### க்ஷேத்திரக்கோவைத்

திருத்தாண்டகம்.

ஆரூர்மூலட்டானமானைக்காவு
மாக்கூரிற்றான்றோன்றிமாடமாவூர்

பேரூர்பிரமபுரம்பேராவூரும்
　　பெருந்துறைகாம்பீலிபிடவூர்பேணுங்
கூரார்குறுக்கைவீரட்டானமுங்
　　கோட்டூர்குடமூக்குக்கோழம்பமுங்
காரார்கழுக்குன்றுங்கானப்பேருங்
　　கயிலாயநாதனையேகாணலாமே. (க)

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### திருநாட்டுத்தொகை

பண்-இந்தளம்.

தென்னூர் கைம்மைத் திருச்சுழியற் றிருக்கானப்
பேர், பன்னூர் புக்குறையும் பரமர்க்கிடம் பாய்நலம்,
மென்னூ ரெங்கள் பிரானுறையுந் திருத்தேவனூர்,
பொன்னூர் நாட்டுப் பொன்னூர் புரிசைநாட்டுப் புரி
சையே. (க)

### ஊர்த்தொகை.

பண் - பழம்பஞ்சுரம்.

காட்டேர்க்கடலேகடம்பூர்மலையே கானப்பேரூராய்
கோட்டேர்க் கொழுந்தே யழுந்தூரரசே கொழுநற்
கொல்லேறே, பாட்டேர்பலரும் பரவப்படுவாய் பனங்
காட்டரானே, மாட்டேறவா மறவாதுன்னைப் பாடப்
பணியாயே. (க)

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

---

சிவமயம்.

# திருக்கானப்பேரென்னும்
# காளையார்கோவில்
# மான்மியவசனம்.

---

## நைமிசப்படலம்.



நவரத்தினங்களாற் பிரகாசிக்கின்ற அநேக
சிகரங்களை யுடையதும் ஊழிக்காலந்
தோறும் உயர்வதும் கற்பகத்தருக்கள்
கனிந்த கனிகளைத் தரப்பெற்றதும் பற்
பல வளமிகுந்ததுங் கருடர், சித்தர் தே
வர் சாரணர் இயக்கர் முதலியோர் வே
தங்களினாற் றுதிக்கப்பட்டதுமான கைலாய கிரியின்
மேலுள்ள ஆயிரக்கான் மண்டபமத்தியில் பளிங்குக்
கற்களா லியற்றப்பட்ட பதினாறுகான் மண்டபத்திற்
சிங்கா தனத்தின்மேல் முருகக்கடவுளும் விநாயகமூ
ர்த்தியும் இருபுறங்களிலும் பொருந்த இடபவாகனத்
தில் உமாதேவியோடு தேவர்களெல்லாந் துதிக்கும்
படி சிவபெருமான் வீற்றிருக்கும்போது திரிபுண்டர
தாரிகளாயும் விரதநியமம் பூண்டவர்களாயு மிருக்கிற
சௌநகர்முதலாயுள்ள பற்பல முனிவர்கள், வந்து
அச்சிவபெருமானுடைய பாதாரவிந்தங்களை வேதாச

ரமாகிய ஆயிரநாமங்களா லருச்சித்துப்பணிந்து வலை யிலகப்பட்ட மான்போலவும் கடலலையி லகப்பட் ட துரும்புபோலவு முழலுகின்ற மனத்தேமாகிய யா ங்களுய்யும்பொருட்டுத் தேவரீர் வீற்றிருக்கின்ற பற் பல தலங்களினும் மிகவுயர்ந்த ஒருதலத்தை உள் ளங்கை நெல்லிக்கனிபோல் யாங்களறியும்வண்ணம் உரைத்தருள வேண்டுமென்று சொல்லி யனைவரும் வணங்கி நிற்கையில் எம்பெருமான் மணிமுடிதுளக்கி யருள்சுரந்து கூறுகின்றார். இப்பூலோகத்திலே நாம் வசிக்குந் தலங்கள் பற்பலவற்றுள்ளுஞ் சிறந்தது உத் தரகாளிபுரம். அதினுஞ் சிறந்ததாய்த் தரிசிப்பவர் களுக்கு முத்தியுஞ் சித்தியு மளிக்கத்தக்கது தட்சிண காளிபுரமாம். அதின் மான்மியமும் இலிங்கமான்மிய மும் சகலபாபங்களையு மொழிக்கத்தக்க தீர்த்தமான் மியமும் சூதமுனிவரிடத்து அறிந்துகொள்ளுங்களெ ன்று கூறியருளக் காசிபர், கபிலர், சத்தி, காத்தியா யனர், பரத்துவாசர், முற்கலர், ககோளர், வாமதே வர், வசிட்டர், கோசிகர், பிருகு, வீதிகோத்திரர், கா லவர், தூர்வாசர், சீவற்சர், சம்பு, மௌற்கலர், ஆபத் தம்பர் முதலிய முனிவர்களெல்லாம் அளவற்ற ஆநந் தக்கடலின் மூழ்கி விடத்தைக்கண்டத்திலணிந்த சிவ பெருமானைப்பணிந்து கைலாசகிரியின் தென்கிழக் கில் பிரமனுற் சக்கரமாக்கி விடப்பட்டபுல்நின்ற இட மாகிய நைமிசாரணியத்தை நோக்கிச் சூதமுனிவரை யடைதற்பொருட்டுச் சென்றார்கள்.

சிவபிரானுடைய சடாமகுடத்தி னின்றும் இறங்கி இமாசலத்தில் தங்கிப் பின்பு சாகரருடைய என்பிற் படிந்து அவர்கள் நற்கதி பெறும்படி இப்பூவுலகத் திற் சஞ்சரிக்கின்ற கங்காநதியின் கரையின்கணுள்ள தும், ஆல், அகில், மூங்கில், கடம்பு, புன்னை, அரசு, வெண்ணாவல், குருந்து, திருவாத்தி, வில்வம், வேம்பு, பலா, கொன்றை, வன்னி, பாதிரி, களா, மா, பனை, மந்தாரம் முதலியமரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தலவிருட்சங்களொன்று காட்டுவதற் குதாரணமாய் விளங்கப்பெற்றதும் பசுவின் கன்றுகளும் புலிக்குட் டிகளும் ஓர் துறையில் நீருண்ணவும் சிங்கக்குட்டி கள் பெண்யானைகளுடைய முலைப்பா லுண்ணவும் தவஞ்செய்கின்ற முனிவர்களாற் செய்யப்பட்ட யா கப்புகை மேகவாகனமாய்த் தேவலோகத்திற் சென்று தேவேந்திரனை அவிர்ப்பாகத்தைக் கிரகித்துக்கொள் ளும்படி கொண்டுவரத்தக்க சிறப்பமைந்தது மாகிய நைமிசாரணியத்தை அம்முனிவர்களடைந்து வியாச முனிவரது மாணாக்கராகிய சூதமுனிவனைக் கண்டு வேதங்களாற் றெருகுத் துரைக்கப்பட்ட புராணங்க ளனைத்தையும் விவரணமா யெடுத்துரைக்கு முனிவர் சிங்கமே சிவாஞ்ஞையினல் உம்மைத் தரிசிக்கப்பெற் ருேம் நற்கதியும் பெற்ருேம் எங்கட்கொருகுறையு மில்லையென்று துதித்து வணங்கிநின்று விண்ணப் பஞ்செய்கின்றுர். வேதப்பரியையுடைய சிவபெரு மான் அளவற்ற மேன்மையுற்ற முத்திக்ஷேத்திரமாய்

விளங்கிய தட்சிணகாளிபுரத்தின் மான்மியங்களை உம்மாற் றெரிந்துகொள்ளும்படி எங்களுக் கனுக்கிரகித்தருளினர். ஆதலால் நாங்கள் உம்மை யடைந்தோம் அத்தல மான்மியமுழுதும் யாங்களறியும்படி உரைத்தருள வேண்டுமென்று முனிவர்கள் வேண்டத் தட்சிணகாளிபுரத்தையும் யானைமடுவையும், சுவர்ண வல்லியையும், காளீசரையும், சுந்தராம்பிகையையும், சோமேசரையும், மீனட்சியையும், சுந்தரேசரையும், வாண்மேனடந்த வம்மையையுந் தியானித்து ஒரு முகூர்த்தகாலம் உளமுருகி மயிர்க்குச்செறிய வேதவியாசராகிய தமதாசிரியரின் திருவடிகளைத் தியானித்துத் திக்குநோக்கி வணங்கிச் சௌநகாதி முனிவரைப்பார்த்து இருசெவிகீ கமுதாய்க் குற்றந்தீரக் கேட்பீராகவென்று சூதமுனிவர் சொல்லத் தொடங்கினர். தன்னை யடைந்தோர்க்கு மகத்தான பலத்தைத் தருவதும் நித்தியசுயம்புவும் ஒப்பற்றதும் தேவர்களாகிய புட்பங்களால் நிறைந்ததும் சுவர்ண வல்லியாகிய வல்லிக்கொடியாற் சுற்றப்பட்டு விளங்குகின்றது மாகிய காளீசுவர கற்பகவிருட்சமானது உங்களுடைய தாபத்தைப் போக்குகவென் ருசீர்வதித்துத் தபோதனர்களே காளீசுவரருடைய கதையைக் கேட்க விரும்பியதினல் நீங்களே சீவன் முக்தர்கள் உள்ளன்போடு கேட்பவருடைய பவங்களையெல்லாம் கசிப்பித்துக் குறைவற்ற அறம் பொரு ளின்பங்களை யனுக்கிரகித்துப் பின்பு முத்தியையுங் கொடுக்கத்

தக்க தட்சிணகாளிபுர மான்மியத்தின் வரலாற்றைக் கேளுங்கள். முற்காலத்தில் அழகுபொருந்திய மா கின்மதி யென்னும் நகரத்தை அரசாண்ட சைவ பத்தி சிவபூசை சிவகதாசிரவணங்களில் மிகுந்த ஆசையையுடைய சதாநீகனென்ற அரசனானவன் பரி சுத்தஞ் செய்யத்தக்க தீர்த்தயாத்திரை செய்துகொ ண்டு அநேக சிவாலயங்களின் மான்மியங்களைப் போதிக்கத்தக்க உதங்கமுனிவருடைய ஆச்சிரமத் தையடைந்து சகல கலைகளையு முண்மையான நற்கதி யையு முணர்ந்தவராகிய இம்முனிவரே சிவபெரு மானென்று அவருடைய பாதங்களில் முடிசூட்டி அஞ்சலி செய்துகொண்டு தட்சிணகாளிபுர மான்மி யத்தை விரித்துரைக்க வேண்டுமென்று வினவ அவ் வுதங்கமுனிவர் அன்போடுகூறத் தொடங்கினர். உத் தரகாளிபுரம் கோதாவிரி தீரத்திலிருக்கின்றது. அதி லும் மிகச்சிறந்த தட்சிணகாளிபுரமானது நினைத்த அளவில் சித்தியும் புத்தியும் முத்தியும் சித்திக்கத் தக்கதாய் சமுத்திரத்திற்கு மூன்று யோசனைக்கு மேற்கிலும் வைகைநதிக்கு ஒருயோசனைக்கு வடக் கிலும் மதுரைக்கு ஈசானியத்தில் நான்குயோசனை தூரத்திலும் திருப்புத்தூர்க்கு இரண்டரை யோச னைக்குத் தெற்கிலும் ஒன்றரையோசனை விஸ்தார முள்ளதாய்ப் பாண்டியதேசத்தி லிருக்கின்றது. அத் தலத்திற்குப் பெயர்பலவுள அவையாவன, காளிபுரம் சோதிவனம் மந்தாரவனம் மோட்சப்பிரதம் உத்

தம சைவக்ஷேத்திரம் காந்தாரம் தவசித்திகரம் தேவ தாருவனம் பூலோககைலாசம் என்பனவாம். இப்பெயர்களை உச்சரித்தாலும் சனனம் நீங்கும். இத்தல மான்மியத்தை நீ விரும்பியதற்கேது நினது தவப் பயனே. நீயே கிருதார்த்தனுமாய் கேட்பாயென்று உதங்கமுனிவர்கூற அரசன் முனிவரே உலகின்கணுள்ள எத்தலங்களினும் இத்தலம் மிகவுஞ்சிறந்ததென்பதை விரித்துரைக்க வேண்டுமென்று வினவ முற்காலத்தில் சுமந்துமுனிவர் தேவவருமராசனுக்குரைத்தவண்ணம் சதாநீகராசனுக்கு உதங்கமுனிவர் கூறுவாராயினர். முற்காலத்தில் ஒருதினத்தில் கைலாயத்தில் அம்பிகை பரமசிவனை நோக்கி நீர் எழுந்தருளியிருக்கும் பற்பலதல்ங்களிலும் தரிசித்த மாத்திரத்தில் பிறவியை யொழிக்கத்தக்க தீர்த்தங்களும் யுகாந்தத்திலும் அழியாத இலிங்கங்களும் நிறைந்திருக்கின்றனவே அவற்றில் உத்தமதலம்யாது உரைத்தருளவேண்டுமென்று வினவப் பரமசிவன் பெண்ணே நம்முடைய பற்பல தலங்களிலும் ஆயிரத்தெட்டு உத்தமம் அவற்றுள் ஐந்நூறு உத்தமம் அவற்றுள் முந்நூறு உத்தமம் அவற்றுள் முப்பத்துநான்கு உத்தமம் அவற்றுள், பதினாறு உத்தமம் அவற்றுள் எட்டு உத்தமம் அவற்றுள் நான்கு உத்தமம் அவற்றுள் இரண்டு உத்தமம் அவை எவையெனில் உத்தர காளிபுரமொன்று தட்சிண காளிபுரமொன்று அவற்றுள் தட்சிண காளிபுரமானது உத்தமோத்தமமாயும்

உலகத்தில் சிறந்ததாயும் மதுரையிலும் சிறந்த மான்
மியமுடையதாயு மிருக்கின்றது. அத்தலத்திலுள்ள
சோதிலிங்கத்தில் துவாதசாந்தத்தில் மீனலோசனை
யாகிய உன்னோடு வசிக்கின்ற யாம் எக்காலத்திலும்
வாழ்கின்றோம், அவ்விலிங்கமே உத்தமோத்தமமென்
றதற் கடையாளச் சுவர்ண ரேகையிருப்பதை இக்கா
லத்திலும் காணலாம் அத்தலம் பிரளயத்திலும் அழி
வதில்லை. பிரமாண்டத்தில் அறுபதுகோடிதீர்த்தங்
கள் உண்டு அவற்றுள் பூலோகத்தில் மூன்றரைக்
கோடிதீர்த்தங்கள் உண்டு அவற்றுள் தட்சிணகா
ளிபுரத்திலுள்ள சிவகங்கையில் மூழ்கினல் எல்லா
வற்றிலும் மூழ்கினபயனைத்தரும். தலம் தீர்த்தம்
மூர்த்தி என்னு மூன்றுமான்மியங்களும் சேர்ந்து
அத்தலத்தன்றி மற்றொன்றிலு மில்லை. கா என்றத
னல் பிறவிநீக்கமும் ளி என்றதனல் சித்தசுத்தியும்
பு என்றதனல் பரமஞானமும் ரம் என்றதனல் சுவர்
க்கமுந்தருதல் பற்றி அது காளிபுரமென்றாயிற்றெ
ன்று பரமசிவன் உமாதேவியாருக்குத் திருவாய்மல
ர்ந்தருளும்போது அப்பரம சிவனுடைய மடியின்
மேல் வீற்றிருந்த குமரக்கடவுள் ஆராய்ந்தறிந்து அவ
ரது மாணக்கராகிய அகத்தியமுனிவருக்குத் திரு
வாய்மலர்ந்தருள அவ்வகத்திய முனிவர் எனக்குச்
சாற்றினர். அதை உனக்குச் சொல்கின்றேனென்று
சூதங்கமுனிவர் சதாநீகமகாராசனுக்குச் சொல்லி
யருளினர். அவ்வாறு தட்சிணகாளிபுர மான்மியமா

னது வியாசமுனிவராற் கூறப்பட்ட பதினெண்புரா ணங்களுள் சூரிய புராணமாகிய பிரமகைவர்த்தத் தில் சொல்லப்பட்டுள்ளது அதைச் சொல்லுகின் றேன் சவுநகாதி முனிவர்களே நீங்கள் செவிகளா கிய இலைக்கலத்தாற் பருகுங்களென்று சூதமாமுனி வர் சொல்லத் தொடங்கினர்.

நைமிசப்படல முற்றிற்று.

## உ-வது. அகத்தியர் ஞானோபதேசம்பெற்ற படலம்.

கேளுங்கள் சௌநகாதிமுனிவர்களே முன்னொரு காலத்தில் அகத்தியமுனிவரானவர் சிவபூஜைத்தந் திரங்க ளிரண்டும் ஈசுவரனுடைய்ய யதார்த்த சுவரூப மும் அறியவேண்டி அநேக புண்ணிய தலங்களெல் லாஞ் சென்று பரமசிவனைத் தரிசித்துக்கொண்டு தே வர்களால் வந்திக்கப்பட்ட சோதிவனத்தைப் புண் ணியவசத்தினு லடைந்தார்.

அச்சோதிவனத்தில் மந்தார விருட்சங்கள் மலர்த் தேனைப் பொழிய அதையுண்டு வண்டுகள் இனிய கானமாகிய தேனைப் பொழியவும் தேமாமரங்கள் செவ்விய.கனிரசத்தையூற்றக் குயில்கள் தொனிரசத் தையூற்றவும் மயில்கள் ஆடிக்கொண்டிருக்கவும் பஞ்சவர்ணக் கிளிகளெல்லாம் பஞ்சாட்சரத்தை யுச் சரித்துக் கரியநிறத்தையுடைய இயமனை யுதைத்தவ ரே மன்மதனை எரித்தவரோ பொய்யனாகிய தக்கனு

டைய வேள்வியை யழித்தவரே என்று உண்மையறிந்து துதித்தலைக்கண் டதிசயித்து நாற்புறமும் பார்த்து இந்த வனமானது தேவேந்திரனுடைய அழகிய நந்தனவனமோ குபேரனுடைய சைத்திரரதமென்னு முத்தியானமோ வென்றையுற்று அப்பாற் செல்லு கையில் அறிவால் நிறைந்தவரது புத்தியைப் போற் றெளிந்த பரிசுத்தமாகிய மலர்கள் மலிந்த ஒரு தடாகமிருக்கக்கண்டு அதில் மூழ்க நினைத்தபொழுது ஆகாயத்தில் ஓ ரசரீரிவாக்கு ஓ அகத்தியா இப்புண்ணிய தீர்த்தத்துக்குச் சிவகங்கையென்று பெயர் இதில் மூழ்கினால் நினைத்தனவெல்லாம் நினைத்தவண்ணஞ் சித்திக்கும் இதில் நீ விதிப்படி மூழ்கி இதின் கரையிலிருந்து தவஞ்செய்வாயாகில் நினைத்தற்கரிய சிவ ஞானம் சீக்கிரத்தில் உதயமாகும் என்று சொல்லக் கேட் டதிசயித்து வேதவிதிப்படி சங்கற்பித்துக்கொண்டு மூழ்கி விபூதி ருத்திராட்சந்தரித்து அத்தீர்த்தத்தின்கீழ் கரையில் பரிசுத்தமான ஓ ராச்சிரமமமைத்து அதிலிருந் தைம்பொறிகளையு மடக்கி ஆகாரமின்றி யோகாசனத்தி லிருந்து இளவேனிற் காலத்தில் இரண்டு கைகளையும் மேலே யுயர்த்திக் கால்கள் பூமியிற்படாது அந்தரத்தில் நின்றும் முதுவேனிற் காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலிருந்தும் கார்காலத்தில் நீர் நிறைந்த தடாகங்களில் மிதந்தும் கூதிர் முன்பனி பின்பனி என்னும் முக்காலங்களிலும் ஆகாயத்தினின்றும் யாவராலும் அளவிடப்படாத பரம

சிவத்தைத் தியானித்துப் பத்தாண்டுவரை யருந் தவஞ்செய்ய அவ்வகத்தியமுனிவருக் கெதிரில் கண் களாற் பற்றப் படாததாயும் ஆகாயம் பூமி எங்கும் நிறைந்ததாயும் கோடிசூரியப் பிரகாசமாயும் தேவர் களால் துதிக்கப்பட்ட பரஞ்சோதி வடிவொன்று தோன்றக்கண்டு வியந்தெழுந்து பணிந்து துதிக்கத் தொடங்கினர். அண்டகோடிகளெல்லாம் எந்தவஸ் துவினுடைய ஒளியினால் விளங்குகின்றதோ சூரியனு னவன் எதனொளியால் உலகங்களை விளக்குகின்றா னோ அஞ்ஞானமாகிய இருளானது எதனொளியால் ஒழியுமோ அந்த ஏகமாகிய சோதி சுவரூபமே போ ற்றுகின்றேன். சந்திரனானவன் எந்த ஒளியினுடைய கோடியிலொரு பங்கைக்கொண்டு புவனங்களையெல் லாம் விளக்கி ரசநீகரனென்னும் பெயரடைந்து சஞ் சரிக்கின்றானோ அந்த அளவில்லாத ஏகமாகிய சோதி சுவரூபமே போற்றுகின்றேன் அக்கினியானது எந்த ஒளியினது ஒரு பங்கைக்கொண்டு உலகங்களை விள க்கித் தகிக்கின்றதோ. எந்த ஒளியானது இரத்தினங் களின் ஒளிக்குக் காரணமோ அந்த ஏகமாகிய சோ திசுவரூபமே போற்றுகின்றேன். அரிய வேதங்களின் முடிகளால் அறியப்படாத அகண்டமாயும் நிர்விகார மாயும் நிட்களமாயும் எங்கும் நீங்காது எல்லாவற் றையும் உண்டாக்கி ஒடுக்குகின்றதற் பரமாயும் விள ங்குகின்ற ஏகமாகிய சோதி சுவரூபமே போற்றுகின் றேன் என்று துதித்துப் பலமுறை பணிந்து அகத்

தியமுனிவரானவர் மிகுந்த அன்போடு நிற்க அந்த ச்சோதிமண்டலத்தின் மத்தியினின்று கங்கையையும் சந்திரகலையையும் தரித்த சடாதரராய்த் திரிநேத்திர முடையவராய்ப் படிகம்போன்ற திருமேனியோடு வாமபாகத்தில் உமாதேவி விளங்கக் கருணைக்கடலா கிய சிவபெருமான் பிரமத கணங்கள்சூழ வெள்ளிய இடபவாகனத்தின்மீது தோன்றிக் காட்சி தந்தருளி அகத்தியமுனிவரை நோக்கித் திருவாய் மலர்ந்தருளு கின்றார்.

ஓ! அகத்தியமுனியே உன்னாற் செய்யப்பட்ட தவ யோகங்களை மகிழ்ந்தோம் உனக்கு வேண்டுவனவற் றைக் கேட்பாயென்று திருவாக்கருளக் கலசோற்பவ ரான அம்முனிவர் மெய்முழுதும் மயிர்க்குச் செறிய நின்று அளவற்ற கருணைக்கடலே உமது திருவரு ளால் உம்முடைய சுவரூபத்தையும் பூசாவிதிகளை யும் அடியேனறியும்வண்ணம் உரைத்தருள்க வெ ன்று விண்ணப்பஞ் செய்யப் பரமசிவன் நன்றுகேட் டனையென்று புன்னகை கொண்டருளிச்செய்கின் றார் எம்முடைய சுவரூபத்தை யறியத் தேவர்களா லுங் கூடாது அப்படிப்பட்டதை யுன்னிடத்தில் யாம்வைத்த அன்பினா லுரைக்கின்றோம் கேட்பா யாக பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சந்திரன் சூரியன் இயமானன் என்னும் எட்டும் எமது அங்க மாம். எம்மைத்தவிர ஒருபொருளுமில்லை எல்லாம் எம்மிடத்தி லடங்கி யிருக்கின்றன. எப்பொருள்

களிலும் யாமே பிரவேசித்து அணுவுக்கணுவாயும் மகத்துக்கு மகத்தாயும் நின்று விளங்குகின்றோம் சச்சிதாநந்தமாயும் நிற்குணமாயும் ஓரிச்சையுமின்றி யிருக்கின்ற எம்மை நான்கு வேதங்களாலும் சந காதி முனிவர்களாலும் இன்னும் அறியப்படவில்லை இப்பொழுது சர்வவியாப்பியமா யெழுந்ததும் உன் ஞற் றரிசிக்கப் பட்டதுமாகிய திவ்விய சோதிவடிவமே எமதுண்மையுருவம் இந்த இரகசியம் யாவராலும் அறியத்தக்கதன்று எமது அருளுேக்கத்தால் நான்கு வேதப் பொருள்களும் உனக்கு நினைத்தவளவிற் றோன்றக்கடவது. தென்மொழிக் கிலக்கணமியற்றும் வன்மையுமுண்டாகக் கடவது. வேதவிதி ஆகமவிதி என்கிற சிவபூசா விதிகளிரண்டும் மனத்திலுதிக்கக்கடவது. பிற்காலத்தில் விந்தியமலையானது கருவித்துச்சந்திரசூரியனைத்தடைப்படுத்தும். அதை உள்ளங்கையினுற் பூமிக்குள் ளழுத்தவும், பிற்காலத்தொருகாரணத்தாற் சமுத்திரத்தை யுள்ளங்கையிலெடுத்து உழுந்தளவாக்கி ஆசமனிக்கவும் நின்னையூசித்த இந்திரன் முதலிய தேவர்களுடைய வறுமையை நீக்கவும் உனக்கு வரமளித்தோம் நீ இத்தலத்திற் பல்லாண்டு தவம் பயின்றமையால் இதற்கு அகத்திய க்ஷேத்திரமெனப் பெயர் வழங்குகவென்று திருவாய் மலர்ந்தருளிப் பரமசிவன் றமது சிற்சொரூபத்திற் றிரோபவித்தார். அவ்வகத்திய முனிவர் பணிந்தெழுந்து யானுய்ந்தேன் யானுய்ந்தேனென்று துதித்து

ஆநந்த பரவசராய்க் கோயிலிற்புகுந்து மூலலிங்கத் தையர்ச்சித்து அட்டாங்க பஞ்சாங்க நிரயாங்கங்க ளாற் பணிந்து வலம்வந்து நந்தியிடத்து விடைபெற் றுக் கொண்டு தன்னாச்சிரமத்தை யடைந்தார்.

அகத்தியர் ஞானோபதேசம்பெற்றபடல முற்றிற்று.

## ௬-வது. காளிதிருவவதாரப் படலம்.

அகத்திய முனிவர் ஞானோபதேசம்பெற்ற சரித்தி ரத்தை மொழிந்தோம் இனி உமாதேவியானவள் ஈசு ரசாபத்தால் காளியாகிய சரித்திரத்தைக் கூறுகின் ரோம் கேளுங்கள் சௌநகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார். பரமசிவ னைவர் அகத்திய முனிவர்க்கு வரமளித்த பின்னர் அந்தத் திருவுருவோடு கணநாதர் புடைசூழச் சோதி வனத்தில் உலாவி வருகையில் உமாதேவி பரமசிவ னைப்பணிந்து ஓ மாயாதீதரோ உமக்குச் சகளரூபம் எற்றிற்கென்று வினவ அப்பொழுது பரமசிவன் ஓ பெண்மணியே சிருட்டி திதி சங்காரம் திரோப வம் அநுக்கிரகம் என்னு மைந்தொழிற்காகவே இவ் வுருக்கொண்டிருக்கின்ரோம் எமது கண்கள் திறக்குங் காலத்து உலகந்தோன்றும். மூடுங்காலத்து அழியும், எமது அருட்டிறத்தாலுலகம் வழங்கற்பாலனவென்று திருவாக்கருள இமயவல்லிகேட்டு ஆநந்தித்துப் பரம சிவனுடைய விழிகள் திறத்தலும் மூடலுமே உலகெ

லாம் தோன்றுவதற்கும் அழிவதற்கும் காரணமென்ற தைப்பரீட்சிக்க விரும்பிப் புன்னகையுடன் மகளிர்வி ளையாட்டைப்போல் பரமசிவனுடைய பின்புறத்தில் நின்று முப்பத்திரண் டறங்களையும்வளர்க்கின்ற தன திருகரத் தாமரைகளால் சந்திர சூரியர்களாகிய பரம சிவனுடைய திருக்கண்களை இறுகப்புதைத்தாள். அப பொழுது மூவுலகங்களுமிருளிற்புதைந்தன சீவர்களெ ல்லாம் பதைத்து மயங்கித்தியங்கி ஏங்கி ஆகா இது என்ன பிரளயகாலமோ என்று நடுங்கினர்கள். அத் துன்பத்தை உயிர்க்குயிராகிய பரமசிவன் றிருவுள்ளத் தறிந்து உமாதேவியைக்கோபித்தலும் கண்களைவிடுத் துநின்றாள் அப்போது தருமமூர்த்தியாகிய சிவபெரு மான், உமாதேவியாரைப் பார்த்து ஓதாட்சாயணி. எமது ஆஞ்ஞையினல் வேதவிதிப்படி யொழுகும் அந்தணர்களுடைய கருமங்கள் யாவும் காலவரையின் றி நசித்தன. என்னைக்குறித்துச்செய்யும் பற்பல யா கங்களும் ஆறுகால பூசைகளும் யோகிகளுடைய யோகங்களும் இன்னிசையோடு என்னைக்குறித்துச் செய்யப்படுந்தோத்திரங்களும் ஆகியஇவையெல்லாம் ஒழிந்தன. அல்லாமலும் அவ்வவர்களாற் செய்ப்படு ம் நல்வினை தீவினைகளுக்குத் தக்கவாறு சுவர்க்கநரகங் களில் இன்பத்துன்பங்களை யநுபவிக்கக் காலஅளவு தெரியாமையால் மயங்கி மூவுலகத்தாரும் துன்புற் ருர்கள். ஆதலால் எமது உளக்குறிப்பில்லாமல் இப் பெரும் பாதகத்தை உலகுக் கியற்றினமையால் இக்

கணமே, நீ தமோகுண ரூபமான இருள்வடிவத்தோ
டு கோரரூபமுடைய காளியாகக்கடவையென்று குரூ
ரசாபத்தை யளித்தார் இடபக்கொடியையுடைய பர
மசிவனால் கொடுக்கப்பட்ட சாபத்தைக்கேட்டு உமா
தேவி நடுங்கி அவரது திருவடித்தாமரைகளில் வீழ்ந்
து உமது இடப்பாகத்தைவிட்டுப் பிரிந்து ஒரு கண
மேனுந் தரிக்கமாட்டேன். யான் அறியாமையினாற்
செய்தபிழையைப் பொறுத்தருளி அது நீங்கும்வழி
யையும் அருள்கவென்று யாசித்தாள் அப்போது
பரமசிவன் உமாதேவியை நோக்கி உலக கண்ட
கர்களாகிய அசுரர்களை அழித்தற்பொருட்டு இச்
சோதிவனத்துள் சின்னாளிருப்பையாயின் சாபவி
மோசன மாகுமென்று சொல்லிச் சோதிவடிவாய்
மறைந்தருளினார்; அக்கணமே உமையவளுந் துர்க்கை
வடிவாய் அச் சோதிவனத்தின் வடகீழ்த்திசையில்
ஒருயோசனை தூரத்திலுள்ள மருதவனத்தை யடைந்
து சாபவிமோசன காலத்தைக் கருதிக்கொண்டு பர
மசிவனை நோக்கித் தவம்புரிந்துகொண்டிருந்தாள்.
இக்கதைநிற்க, தேவேந்திரனானவன் வலாசுரன் முத
லிய எல்லா அசுரரையும் சங்கரித்தமையை அவர்கள்
தாயாகிய திதியானவள் கேட்டுத் துக்கித்துத் தனது
கணவராகிய காசிப முனிவருடைய திருவடிகளில்
வீழ்ந்து இந்திரன் எனது புத்திரர் யாவரையுங் கொ
ன்றி.என்னை மலடிபோலாக்கினான். அவனை வெல்
லத்தக்க புத்திரர்களை அளித்தருள்வீரென்று வேண்

ட அதற் கம்முனிவ ரியைந்து அவளிடத்தில் மிகுந்த பராக்கிரமமுள்ள இரண்டு புத்திரர்களை முன்பு தோற்றுவித்துப் பின்பு ஆறுபுத்திரர்களை உற்பத்திசெய்து போரில் வெற்றிபெறத்தக்க பற்பல ஆயுதங்களு மளித்தார். அவர்கள் பெயர்கள் சண்டன் தாரகன் கும்பன் உத்தண்டன் வீமாக்கன் வயிரவசுவனன் மகோதரன் வீரன், என்பனவாம். அப்புத்திரர்களைப்பெற்ற திதியானவள் முற்காலத்தினும் மிகுதியான மகிழ்ச்சியடைந்தாள், அப்போது சேட்டபுத்திரனுகிய சண்டன் தாயைநோக்கி யான் பரமசிவனைக்குறித்து அருந்தவம்புரிந்து வேண்டியவரங்களைப் பெற்றுக்கொண்டு மூவுலகங்களையும் வெல்லாமல் இங்குத் திரும்பி வருவதில்லையென்று அவள்மகிழும்படி உரைத்துவிட்டுக் கோகர்ணமென்னும் தலத்தை யடைந்து ஆயிரம் வருடம் கொடுந்தவம்புரிய அருட்கடலாகிய பரமசிவன் இடப வாகனத்தின்மேல் பார்வதி சமேதராய்ச் சுப்பிரமணியரோடு அச்சண்டன் முன்பு தோன்ற அவன்கண்டு உடல்முழுதும் புளகித்துக் கண்களில் ஆநந்தக் கண்ணீர்பெருக நாத்தழுதழுத்துநின்று துதிக்கப் பரமசிவன் சண்டாசுரனை நோக்கி உனக்கு வேண்டும் வரங்களைக் கேட்பாயென்றருள அவன் மகிழ்ந்து ஓ சுவாமி இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் முதலியவர்களாலும் பிரம விட்டுணுக்களாலும் உம்மாலும், எனக்குச் சாவில்லாமலும்

சத்துருக்கள் என்னோடு போர்செய்யும்போது என்னுடைய உருவம் அவர்களுக்குத் தோன்றாம லிருக்கவும் அவர்களுருவங்களை யானறியவும் எனது ஆயுதத்தால் அவர்கள் தலை தூளாகவும் தேவர் மனிதர். மிருகங்கள் முதலியவைகளால் எனக்கு மரண மில்லாதிருக்கவும் வரந்தந்தருள்க வென்று வேண்டப் பரமசிவன் நீ வேண்டியவைக ளெல்லாம் உண்டாகக் கடவதென்று வரமளித்து மறைந்தார். இவ்வாறு வரம்பெற்ற சண்டாசுரன் இறுமாந்து நமக்கொருவரும் நிகரில்லையென்று அகங்கரித்து அசுரத் தச்சனை யழைத்துச் செல்வமிகுந்த மாயாபுரியென்னும் ஒரு நகரத்தை யுண்டாக்குவித்து அந்நகரத்தில் அநேகஞ் சேனைகளோடும் தம்பியர் எழுவரோடும் வெகு காலம் வாழ்வுற்றிருந்தனன். பின்பு தேவலோகத்தை வென்று வெற்றிக்கொடிநாட்ட விரும்பி இரதக்கதுரக பதாதி என்னும் நால்வகைச் சேனைகளுடன் அமராபதியை வளைத்துக்கொண்டான். சண்டாசுரன் நம்மை வெல்லும்பொருட்டு வந்து சூழ்ந்துகொண்டிருக்கிறு னென்றதைத் தூதர்களாற் கேள்வியுற்ற தேவேந்திரனானவன், வெள்ளிய மலையின்மேல் மின்னலோடு கூடிய மேகமானது ஏறியதுபோல் வச்சிராயுதத்தோடு ஐராவதத்தில் ஏறிப் போர்க்களத்தை யடைந்தான். தேவசேனையும் அசுரசேனையும் இரண்டு கடல்கள் ஒன்றோ டொன்று எதிர்த்தாற் போல் எதிர்த்தபொழுது தேவர்கள் சூலம், மழு, வாள்,

வேல், சக்கரம், தண்டு, கத்தி, முதலிய ஆயுதங்களே
வீசி அசுரர்கள் மெய்யினின்றும் இரத்தப்பெருக்கெ
ழச் சேதித்தார்கள் உடனே அசுரர்கள் மிக்ககோபங்
கொண்டு தேவர்களே வளேந்து அநேக பாணங்களே
அவர்கள்மேற் பொழிந்து கர்ச்சித்தார்கள், அவைக
ளால் தேவர்கள் அடிபட்டுவீழ்ந்து சோர்ந்து வருந்
தக்கண்ட தேவேந்திரன் மிகச்சினந்து கையிலேந்திய
வச்சிராயுதத்தினல் அசுரர்தலேகளிற் புடைத்தான்
அதனல் அடிபட்டுச்சோர்ந்து விழுந்த தன்சேனே
களேச் சண்டாசுரன் கண்டு கண்களில் தீப்பொறி சித
றக் கோபித்துப் பற்களேக்கடித்து வன்மையுள்ள தம்பி
மார்களே நோக்கி நீங்கள் சென்று இந்திரனுடைய
தலேயையுருட்டி வாருங்களென்று ஏவ அத்தம்பிய
ரொழுவரும் எதிர்த்து இந்திரனுடைய ஆயிரங்கண்
களிலும் பாணங்களே வருடித்து ஐராவதத்தின் துதிக்
கையை அறுக்க அது கதறிப் பின்னிட்டது. அதுகண்
டு தேவேந்திரன் கோபங்கொண்டு மேகவாகனத்தே
றித் தன் வச்சிரவாளேக் கையாற்சுழற்றி அவ்வசுரர்
கள் பிரிந்தோடும்படி அடிக்கப் போர்க்களத்தில்
சோர்ந்து வீழ்ந்தார்கள். அதுகண்டு சண்டாசுரன்
தேரிலேறி இந்திரனே விருத்திராசுரன்போல் எதிர்
த்துப் பரமசிவனிடத்துப் பெற்றவரத்தினல் ஒரு
வர்க்கும் தோன்ருது மறைந்து நின்று பலபாணங்
களேப் பொழிய இந்திரன் மாதலியால் நடத்தப்பட்
ட தேரிலேறி வில்வளேத்துக் குணத்தொனிசெய்து

அநேக பாணங்களேவி சண்டாசுரன் விடுத்த பாண ங்களால் உண்டாகிய இருளைப்போக்கி அவனையுத் தகளமெங்கும் தேடிக்காணுமல் அவனுல் விடப்பட் ட பாணங்கள் தன்சரீரத்தைத் துளைப்பதை யுட் டுங்கண்டு இவன் எங்கு ஒளிந்து நின்று பாணங்களை ஏவுகின்றுன் என்கண்ணுக்குப் புலப்படாமை என் னென்று வருந்தி ஆலோசித்துத் தன் சேனையை நோக்கி அவன் ஒளியாது எதிர்நின்று போர்புரிந்தால் வென்றிதோல்வி தெரியும் அவ்வாறன்றி வஞ்சகப் போர் செய்கின்றனன். ஆதலால் நீங்கள் சண்டாசு ரன்மேல் திக்குப் பாலகர்களின் அத்திரங்களை ஏவுங் கள் யானும் என் அத்திரத்தை ஏவுகின்றேன் எல் லோரும் ஒன்று சேர்ந்து அவனை வெல்வோமென்று சொல்ல அவ்வாறு அவர்களும் அத்திரங்களைப் பிர யோகிக்க இந்திரனும் தன் அத்திரத்தைப் பிரயோ கித்தான். சண்டாசுரன் அவைகளைத் தன் அத்திரத் தால் துணித்து மோகநாத்திரத்தைப் பிரயோகித்த லும் இந்திரன்முதலிய தேவர்கள் எல்லாம் போர்க் களத்தில் மயங்கிச்சோர்ந்து வீழ்ந்தார்கள். பின்றெ ளிந்தெழுந்து அவனைவெல்ல வலியின்றி அத்தேவர் கள் இந்திரனேடு பிரமலோகத்திற்குச் சென்றுர்கள் பின்பு சண்டாசுரன் விண்ணுலகத்தைத் தன்வசப்படு த்தி ஐந்தருநீழலி லரம்பையராட ஆதனத்தில் வீற் றிருந்து அரசளிப்பாணுயினன்.

காளிதிருவவதாரப்படல முற்றிற்று.

## ச-வது. காளிபட்டாபிடேகப்படலம்.

காளி திருவவதார சரித்திரத்தை மொழிந்தோம் இனிக் காளிபட்டாபிடேக சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌநகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

தேவர்களுடன் சென்ற தேவேந்திரன் பிரமதேவரிடஞ்சென்று பணிந்து என்னைக் காத்தருள்வாயென்று ஓலமிடப் பிரமதேவர் உனக்குண்டாகிய துன்பம் யாதென வினவச் சண்டாசுரனென்பவன் கொடிய வரத்தினால் எம்மை வென்று எமதுலகத்தையுங் கைக்கொண்டு எங்களைத் துரத்திவிட்டு எங்கும் சென்று யாவரையும் வருத்துகின்றனன் உமக்குப் பிதாமகனென்னும் பெயரிருத்தலால் யாரிடத்தும் அன்புவைத்தல் பொதுவாயிருப்பினும் சுரோத்தமனென்னும் பெயரும் உமக்குளதாதலால் எங்களை இரட்சித்தலே உமது கடமை என்று தேவேந்திரன் பிரார்த்திக்கப் பிரமதேவர் சண்டாசுர னென்பவன் யாவன் அவன் எவ்விடத்துள்ளான் யாரிடத்தில் வரம்பெற்றான் சொல்லென்று அறியாதவர்போல் வினவினர், எல்லாமறிந்த நீர் ஒன்றும் அறியார்போல என்னை வினவியது என்னவென்று தேவேந்திரன் சொல்லிக்கொண் டிருக்கும் பொழுதே இரணபேரிகைச் சத்தமொன்று கேட்டது அதென்னவென்று வெளியிற்போய்ப் பார்க்குமளவில் சண்டாசுரனுடைய சேனைகள் சூழ்ந்துவரக் கண்டார்

கள், அதுகண்ட பிரமதேவர் அன்னவாகனத்திலேறித் தேவசேனைகள்சூழச் சண்டாசுரனை யெதிர்க்க அவன் ஆக்கினேயாத்திரத்தை ஏவித் தேவசேனைகளைத் தகிக்கப் பிரமதேவர் கோபித்துத் தன்னுடைய அத்திரத்தையேவ வரத்தினால் மறைந்திருக்கின்ற சண்டாசுரனைத் தேடிக் காணாது திரும்பிப் பிரமதேவரையே துரத்த அவர் பயந்து தேவேந்திரன்முதலிய தேவர்களோடும் வைகுந்தஞ்சென்று திருமாலிடஞ் சரணமென்றடைந்து முற்காலத்தில் எங்கள் பகையாகிய அசுரரை அழித்தற் பொருட்டுப் பூமியில் தசாவதாரஞ் செய்தீர் இக்காலத்தில் சண்டனையுங் கொன்று எங்களைக்காத்தல் உமது கடமையென்று துதிக்க வைகுந்தவாசியானவர் தேவர்களே நீங்கள் அஞ்சவேண்டாம் அவ்வசுரன் பரமசிவனுடைய வரத்தினால் என்னாலும் இறவான் யுத்தஞ்செய்ய இங்கும் வருவான் நாம் எல்லோருமாய் யுத்தஞ் செய்வோமென்றார், அம்மொழிகேட்ட பிரமன் முதலிய யாவரும் அன்புடனெழுந்து நிற்கும்பொழுது ஒரு தூதன்வந்து அஞ்சி நடுங்கி வாய்குழறிக்கொண்டு இங்கும் சண்டாசுரன் போர்க்கு வந்தானென்றுசொல்லத் திருமாலுங் கருடவாகனத்திலேறிப் பஞ்சாயுதபாணியா யுத்தத்திற் கெழுந்தார் சண்டாசுரன் வில்லைவளைத்துப் பாணவருடங்களைப் பொழியத் திருமாலும் அநேகபாணங்களால் விலக்கினார். சண்டாசுரன் கோபித்துப் பற்பல தேவாத்திரங்களையேவத் திருமாலும் அவ்வவற்றிற்கு

மாறுகிய தேவாத்திரங்களால் விலக்கச் சண்டாசுர னிரண்டு பாணங்களால் திருமாலுடைய சார்ங்கவில்லை முறித்து அவர்மார்பில் ஐந்தம்புகளையும் நெற்றியில் மூன்றம்புகளையும்விட விஷ்ணுமூர்த்தி சக்கரம் வாள் தண்டம் என்பவைகளைவிட அவைகள் அசுர சேனைகளைச் சாய்த்தனவேயன்றிச் சண்டாசுர னின்ற விடம் அறியாமையால் அவனை நெருங்காமல் நீங்க மறுபடியும் நாராயணாத்திரத்தை ஏவ அதுவுஞ்சண்டனைக்காணமற் றிரும்புகையில் சண்டாசுரனால் விடப்பட்ட மாகேசுராத்திரத்தால் முறிபட்டது. இதைக் கண்டதேவர் சேனைகளெல்லாம் பயந்தோடச் சண்டாசுரன் வெற்றி முரசறைந்து தேவலோகம் பிரமலோகம் விஷ்ணுலோகம் முதலியவைகளைத் தன்வசப் படுத்திக்கொண்டு மாயாபுரத்தை யடைந்தான். இவ்வாறு தோற்ற தேவர்களெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்து சண்டாசுரனை வெல்லுமுபாயம் யாதென்று ஆலோசிக்குங்காலத்து விஷ்ணுமூர்த்தியானவர் வியாழபகவானுடன் ஆலோசித்துத் தேவர்களைப்பார்த்து ஓ தேவர்களே! கூகையானது காக்கையை இரவில் வெல்லும் காக்கையானது கூகையைப் பகலில் வெல்லும் அவைபோற் சண்டாசுரனையுங் காலம்பார்த்து வெல்வோமென்று சொல்லப் பிரமாமுதலியவானோ ரனைவரும் குகைகளில் ஒளிந்து வெகுநாள் வசித்தனர். பின்பு பிரமன் திருமால் இந்திரன்முதலிய தேவர்களனைவரும் கைலாசகிரியை யடைந்து பரமசிவனு

டைய பாதாரவிந்தங்களில் வணங்கிநிற்கத் திருமா லாெவர், பணிந்தெழுந்து விஞ்ஞாபிக்கின்றார். கொடிய சண்டாசுர னென்பவன் எங்க ளுலகங்களை யெல்லாம் அபகரித்துக்கொண்டு துரத்திவிட்டான். ஆதலால் நீரே இரட்சிக்கவேண்டும் என்று முறையிடத் திருமாலை நோக்கிப் பரமசிவ னருளிச்செய்கின்றார். இயமனை நிகர்த்த சண்டாசுரன் அரியதவஞ் செய்துநம்மிருவராலுங் கூட வெல்ல முடியாத வரம்பெற்றான் அவனை வெல்வதற்கு உபாயங் கூறுகின்றோம் சம்புத்தீவில் பரதகண்டத்தில் தமிழ்த் தேயத்தில் பாண்டிநாட்டில் சோதிவனமென்று ஓர் வனமிருக்கின்றது அவ்வனத்தில் யாமும் இலிங்க வடிவாய் வீற்றிருக்கின்றோம் நமது சத்தியானவள் முற்காலத்தில் நம்மாற் சபிக்கப்பட்டுப் பத்திரகாளியாய் அங்கு வசிக்கின்றாள் அவள் சற்று நினைந்தால் சண்டாசுரன் இயமபுரி யடைவானென் றருளிச்செய்யத் தேவரெல்லாம் பகையொழிந்தவர்போல்மகிழ்ந்து கைலாசத்தினின்றும் நீங்கித் தென்றிசை நோக்கிச் சென்று சோதிவனத்தை யடைந்து ஓர் மருதமரத்து நீழலில் பத்திரகாளிவீற்றிருப்பதைக்கண்டு பணிந்து சிரத்தின்மேற் கைகளைக் குவித்துநின்று துதித்து எங்களை இரட்சிக்கவேண்டுமென்று முறையிட அத்தேவர்கட்குமுன்னே பிரசன்னமாகித் தேவர்களே உங்களுக்கு நேர்ந்த குறையைச் சொல்லுங்களென் றருளிச்செய்யச் சண்டாசுர னென்பவன் கொடுங்

துயர்புரிந்து எங்க ளுலகங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டு எங்களைத் துரத்திவிட்டான். யாங்க ளிருப்பிடமின்றி மலைக்குகைகளில் வெகுநா ளிருந்து பின்பு கைலாசகிரிக்குச் சென்று சிவபெருமானைத் துதிக்க அவரிரங்கி உன்னிட மனுப்ப உன்னைச் சரணமடைந்தோம். சண்டாசுரன் முதலிய அசுரர்களைக்கொன்று எங்கள் வாசத்தலங்களை அருள்வாயென்று பணிந்தனர். பத்திரகாளியானவள் சரணமடைந்த தேவர்களுக்கு அபயஞ்செய்து உங்கள் வேண்டுகோளின்படியே சண்டாசுரனைக் கொன்று உங்கள் பகையைத் தீர்ப்போம் நீங்களும் சேனைகளாய் வாருங்களென் றருளத் தேவர்கள் நன்றென்று துதித்தனர் சிவபெருமா னுடைய கோபத்தினுற்றோன்றிய சாமுண்டி என்பவளும் சிவபெருமா னுருக்கொண்டவளாகிய மாகேசுவரி என்பவளும் சிவபெருமானுடைய ஆக்கினையால் வந்தார்கள் முற்சொல்லிய அவர்களில் திருமாலும் இந்திரனும் பிரமதேவரும் முருகக்கடவுளும் விநாயகமூர்த்தியும், வைணவி மாகேந்திரி அபிராமி கௌமாரி வாராகி என்னும் ஐந்துருக்கொண்டு நின்றார்கள். மற்றைத் தேவர்களெல்லாம் பூதங்கள் இடாகினி சாகினி பைசாசங்களும் ஆகிப் பயங்கரமான உருவத்தோடு சூழ்ந்து நின்றார்கள். பத்திரகாளியானவள் சங்கம், சக்கரம், கதை, வில், கேடகம், வாள் முதலியவைகளைக் கைகளிற்றரித்து அபய வரதத்தோடும் யுத்த சன்னத்த

மானுள். தேவர்களெல்லாம் கண்டுபணிந்து தேவத்தச்சனால் கோட்டையொன்று நிருமிக்கச்செய்து அக்கோட்டையின் மத்தியில் பத்திராசனம் போட்டுப் பத்திரகாளியை அதிலிருத்திப் பற்பல வாத்தியகோஷங்களுடன் திவ்விய புண்ணிய தீர்த்தங்களால் அபிடேகஞ் செய்து ஆடையாபரணங்களா லலங்கரித்துத் தூபதீபங்காட்டி அருச்சித்துத் துதித்தார்கள். அப்படிப்பட்ட பத்திரகாளியின் அனுக்கிரகத்தால் சாமுண்டி யென்பவளைச் சேனைபதியாக்கிப் புண்ணிய தீர்த்தங்களா லபிடேகஞ்செய்து சத்துருவோ டெதிர்த்தலை யாலோசித்துக்கொண் டிருந்தார்கள். ஆதலால் தேவர்கள் தேவியைக் கண்ட இடமே கண்டதேவி, அவள் வீற்றிருக்கும்படி தேவர்களால் நிருமிக்கப்பட்ட கோட்டையே தேவிகோட்டை, அப்பத்திராசனத்தில் அமர்ந்தருளியவளே பத்திரகாளி என்பார்கள்.

காளிபட்டாபிடேகப்படல முற்றிற்று.

## ௫-வது. சண்டாசுரன் வதைப்படலம்.

காளிக்குப் பட்டாபிடேகஞ்செய்த சரித்திரத்தை மொழிந்தோம் இனிச் சண்டாசுரனைச் சங்கரித்த கதையைக் கூறுகின்றேம் கேளுங்கள் சௌனகாதி முனிவீர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

பத்திரகாளியானவள் இவ்வாறு தேவிசாலபுரத்தில் வசிக்குங்காலத்தில் நாரதமுனிவர் கைலாயகிரிக்குச் சென்று பரமசிவனைத் தரிசித்துச் சோதிவனப்பெருமானைத் தரிசிக்க வரும்வழியிற் சண்டாசுரன் கண்டு ஓ முனியே முற்காலத்தில் எனக்கஞ்சியோடிய திருமால் முதலிய தேவர்களெல்லாம் எங்கிருக்கின்றார்கள் என்று வினவ நாரதமுனிவர் அவர்கள் சோதிவனத்தைச்சார்ந்த தேவிசாலபுரத்தில் பத்திரகாளியை அடைக்கலம் புகுந்திருக்கின்றார்கள் பத்திரகாளியும் உன்னைக்கொல்ல நினைந்திருக்கின்றாள், என்றார். சண்டாசுரன் கேட்டு நகைத்து அவள் என் காற்றாளுக்கு ஆற்றுவளோ. அவளையும் அவளைச் சரணடைந்தவர்களையு மொருகணப்பொழுதிற் கொல்வேனென்று சொல்லி முனிவரை யனுப்பிவிட்டுச் சண்டாசுரன் யுத்தமுயற்சியோடு மிருந்தான், நாரதமுனிவர் தேவிசாலபுரத்தை யடைந்து பத்திரகாளியைக் கண்டு சண்டாசுரன் தன்னிடத்தில் சொல்லியதும் போர்க்கு முயற்சியா யிருத்தலையுங் கூறப் பத்திரகாளி கேட்டுக் கோபித்துச் சாமுண்டி மாகேசுவரி முதலிய சேனைகள் புடைசூழ் ஆகாயமார்க்கமாய்ச் சென்று கோதாவிரி நதியையடைந்து நீராடி அதன் கரையில் வீற்றிருக்கின்ற சிவபெருமானைப் பூசிக்கச் சிவபெருமான் பிரசன்னமாகி நீ நினைத்தவரத்தைக் கேட்பாயென் றருளிச்செய்யப் பத்திரகாளி கூறுகின்றாள் திருமால் முதலிய தேவர்களைத் துரத்திவிட்ட சண்டாசுர னிறக்கவும் இத்தலம் இதுமுதல் என்பெய

ரால் உத்தரகாளிபுரமென்று வழங்கவும் அருள்வா யென்றுவேண்ட அவ்வரங்க ளிரண்டுமளித்துச் சண் டாசுரனைச் சங்கரிக்கப் பத்திரகாளிக்கு ஒருசூலமும் தாரகாசுரனைச் சங்கரிக்கச் சாமுண்டிக்கு ஒரு சூலமு மளித்தார். அதுமுதல் பத்திரகாளியும் சூலினி என்ற பெயரைப் பெற்றாள். அத்தலம் உத்தரகாளிபுரமெ னப் பெயர்பெற்றது. பின்பு பத்திரகாளி மகிழ்ந்து சேனைகள்புடைசூழ உத்தரதிசையை நோக்கிச் சென் று மாயாபுரத்தை வளைந்தாள், அதை ஒற்றர்கள் வி ரைவாயோடிச் சண்டாசுரனுக் கறிவிக்கச் சண்டா சுரன் நாரதமுனிவர் சொல்லியதையுநினைத்துப் பின் விளைவதை யறியாதவனாய்க் கலகலவென்று நகைத்து மதியாமலிருந்தான் இப்படி யிருக்கையில் பத்திரகா ளிசேனைகள் அங்கரத்துட் பாய்ந்து இடிமுழக்கம் போல் ஆர்ப்பரித்து அநேக வீரர்களைப் பிடித்துக் கொன்றன. அப்போது அசுரர்கள் கோபித்துச் சதுரங்கசேனையோடெழுந்து பூதகணங்களை எதிர் க்கப் பூதகணங்கள் அசுரர்மேற் பாய்ந்து கன்னங்களை யுடைத்து இரத்தபானஞ் செய்தன. அசுரர்களும் பூதகணங்கள் நடுங்கும்படி அடித்தார்கள் இஃதறிந்த சண்டாசுரன் கும்பனுதியரை யழைத்துக் காளியை விரைவிற்கொன்று வாருங்களென்றேவ அவர் அநேக ஆயுதபாணிகளாய்ப் போர்க்களம் புகுந்து பூதகணங் கள் நடுங்கியோடும்படி போர்செய்தார்கள் அஃதறிந் த பத்திரகாளியும் சத்தமாதர்களில் அறுவரைப் போர்க்கேவ அவர்களும் ஆயுதபாணிகளாய்ச் சென்

று சத்துருக்கள் பயந்தோடும்படி போர்செய்து சோர்வடையுந் தருணத்தில் அபிராமி என்பவள் கும்பனை எதிர்த்துத் தண்டாயுதத்தாற்முக்கக் கும்பனும்மண்டைசிதறி வீழ்ந்தான் மாகேசுவரி என்பவள் சூலாயுதத்தால் உத்தண்டனென்பவனை மார்பைப்பிளந்து வீழ்த்தினள். கௌமாரி என்பவள் வீமாக்கனையும் வைணவி வைரவசுவனனையும் வாராகி, மகோதரனையும், மாகேந்திரி வீரனையும் மோதினர்கள் பூதகணங்களும் அசுரசேனையிற் பாய்ந்து நாசஞ்செய்தன. பலபேய்கள் இரத்தவெள்ளத்திற் றுளைந்து விளையாடின, இவ்வாறு காளி சேனையாற் கும்பன் முதலிய வீரரெல்லாம் வீழ்ந்ததைச் சண்டாசுரன் கேட்டுக் கோபம்பொங்கவெழுந்து நமனும் அஞ்சத்தக்க தண்டாயுதத்தை யெடுத்துக்கொண்டு ஆயிரங் கோவேறுகழுதைகள் கட்டிய தேரிலேறித் தம்பியாகிய தாரகாசுரனோடும் பற்பல ஆயுதங்களோடும் இடியேறுபோலக் கர்ச்சித்தெழுந்து அளவற்ற சதுரங்க சேனைகள் சூழ மாயாபுரத்தை நீங்கித் தேவருலகெல்லாம் நடுங்கும்படி போர்க்களம் புகுந்தான், அந்த ஆரவாரத்தைக்கேட்ட பத்திரகாளியும் சத்தமாதர்களோடு தண்டாயுத முதலிய ஆயுதங்களைக் கைக்கொண்டு போர்க்களம் புகுந்து ஆரவாரித்து அவ்வவர்களுடைய வாகனங்களிலேறி வில்லைவளைத்து அசுரர்கள்மேல் பாணங்களை ஏவ அசுரர்களும் வில்லை வளைத்து அநேக பாணங்களைப் பொழிய இருதிறப் படையும் பின்னிடாது போர்புரியுங் காலத்தில்

சாமுண்டி என்பவள் சூலம் முதலிய ஆயுதங்களைத்தா ங்கிச் சிங்கவாகனத்திலேறி ஆகாயத்திற் சுழன்று அசு ரர்மீது அம்புமாரிபெய்து சூலாயுதத்தை எடுத்துத் தாரகாசுரனுடைய மார்பில்விடத் தாரகாசுரனும் அச் சூலத்தைத் தடுத்துக்கொண்டு வில்லைவளைத்துச் சா முண்டிமீது ஆயிரம்பாணங்களையெய்தான் சாமுண்டி அவைகளையெல்லாங் கேடகத்தாற்றடுக்க மறுபடியும் தாரகன் அநேகபாணங்களையேவச் சாமுண்டி கபா லத்தினுற்றடுத்துத் தண்டாயுதத்தைக் கைக்கொண்டு தாரகாசுரனுடைய சிரசில் புடைக்க இரத்த வெள் ளம் பெருக மயங்கி வீழ்ந்து தெளிந்தெழுந்து ஒரு வேலாயுதத்தைச் சாமுண்டிமேல் ஏவினன், சாமுண் டி தன்கதையினல் அவ்வேலாயுதத்தை மூன்று துண் டாக முறித்து வீழ்த்த மறுபடியும் தாரகன் சாமுண் டியுடைய சிங்கவாகனத்தின்மேல் அநேகபாணங்களை யேவச் சிங்கமானது அண்டமெல்லாந் திடுக்கிடும்படி கதறிற்று சாமுண்டி தண்டாயுதத்தால் அவனுடைய சாரதியும் வாகனமும் மாயும்படி புடைத்துச் சூலத் தால் தாரகனுடைய மார்பில் குத்தினள் தாரகன் மயங்கிவீழ மோகநாத்திரத்தைப் பிரயோகித்து அசு ரச்சேனையை மயக்கிவிட்டுச் சாமுண்டியும் பத்திர காளியோடு சேர்ந்துகொள்ளத் தாரகனும் சண்டா சுரனேடு சேர்ந்துகொண்டான் இருவரும் வில்லை வளைத்துப் பாணவருடங்களை வருஷித்துப் பூதகணங் களையெல்லாங் கண்டதுண்டமாக்கிச் சண்டாசுரன் மறைந்து நின்று யுத்தஞ்செய்யப் பத்திரகாளிகண்டு

நம்மேல் சண்டாசுரன் பாணங்களைப் பொழிவதை யும் நம்முடைய சேனைகளெல்லாம் புரள்வதையும் காண்கின்றோம் சண்டாசுரனைக் கண்டிலோமென்று ஆலோசித்து அவன் நின்றதிசையைக் குறிப்பாலறிந்து பாணங்களை வருஷித்தாள் அவள்பாணங்கள் சண்டாசுரனுடைய சரங்களையெல்லாமகற்றி அவன்சேனையையும் அவனையுங் கலங்கும்படி மோதச் சண்டாசுரன் நடுங்கிப் பத்திரகாளியை வெல்லமாட்டாமல் பாம்பு புற்றி லொளித்தாற்போல் மாயாபுரத்திற் போய் ஒளித்துக்கொண்டான் பத்திரகாளியானவள் சண்டாசுரன் ஒளித்ததையறிந்து மாயையினு லவனை மறைக்கின்ற கவசத்தை யறுத்துச் சிவபெருமானுடைய சூலாயுதத்தால் அவனை வெல்லத்தக்க சூழ்ச்சியை மதித்துச் சிவபெருமானுடைய சோதிவனத்தின் கீழ்ப்பக்கத்தில் அந்தரத்தில் நின்று பரமசிவனைத் தியானித்துத் தன்னிருகைகளையுஞ் சிரசின்மேல் கூட்டிக்கொண்டு ஒரு வருடகாலம் அருந்தவமுயன்றாள். இப்படியிருக்க இவளோடு போருக்காற்றாதொளித்த சண்டாசுரனனவன் எவ்வுலகுஞ்சென்று யாரையும் வென்றேன் பெண்சேனையோடெதிர்த்த காளிக்குத் தோற்றேனென்று வருந்தித் தன்னெண்ணம் பிறர்க்குப் புலப்படாவண்ண மடக்கி வெற்றி பொருந்திய காளியை உயிர்வாங்குவேனென்று பிறரறியக்கூறி ஒற்றரையழைத்துத் தூதர்களே நமது சேனையில் போர்த்திறமையில்லாத சிறுவரும் கிழவருமாகிய பேதையர்களில் சிலரைக்கொன்று நம்

மோ டெதிர்க்கமாட்டாமல் ஒளித்தோடிய பத்திர காளியைத்தேடி அவள்நிலைமைகள் யாவையுமறிந்து விரைவிற் கூறுங்களென ஒற்றர்களறிந்துவந்து சண்டாசுரனைத் தாழ்ந்து கூறுகின்றார், கிழக்குக்கடற் கரையில் சர்ப்பநதி தீரத்திலுள்ள விருத்தபுரிக்கு இரண்டரை யோசனைக்கு மேற்கிலுள்ள சோதிவனத்தின் கீழ்ப்பக்கத்தில் அருந்தவஞ்செய்கின்ற ஒருத்தியைக்கண்டு இவளாரென்று அங்குள்ளாரைக்கேட்க இவள் காளியென்றும் சத்தியென்றும் சண்டாசுரனைக் கொல்லத் தவஞ்செய்கின்றாளென்றும் சொன்னார்களென்று சொல்லச் சண்டாசுரன்கேட்டுக் கோபமூண்டு சேனைபதிகளைப்பார்த்து எல்லாரும் தங்கள் தங்க ளாயுதங்களோடும் காளியை வெல்லப்புறப்படுங்களென்று கட்டளையிட்டுத் தானும் போர்க்கோலங்கொண்டு புறப்படும்பொழுது அவன் மனைவியாகிய உரூபாவதியென்பவள் அவன்முன்புவந்து பணிந்து அன்பரே நீர் எவ்விடஞ் செல்ல வெழுகின்றீர் யார்மேற் கோபங்கொண்டீர் அடியேன் சற்றறியும் வண்ணங் கூறலாகாதோவெனச் சண்டாசுரன் பெண்ணே யாரும்நகைக்கும்படித் திரிகின்றகாளி என்னும் பேரையுடையவள் காலனுக் கிரையாகுங் காலங்கிட்டி என்னை மதியாமல் பைசாசங்கள் சூழும்படி வந்து எனது சேனைகளில் சிலரைக் கொன்றாள் ஆதலாலவளைச் சங்கரிக்க எழுந்தே னென்றான், அது கேட்ட உரூபாவதி சண்டாசுரனைப்பார்த்து அன்பரே முற்காலத்தில் சாகாவர முதலிய எல்லாவரங்களும்

பரமசிவனிடத்துப் பெற்றீர் பராசத்தியிடத்தில் ஒரு வரமும் பெற்றீரில்லை. ஆதலால் அவளே காளியாகி உம்மைப் பகைத்தாளென்று நினைக்கிறேன். அன்றியும் முற்காலத்தில் அளவற்ற வரங்கள்பெற்ற மகிடாசுரனையும் லளிதையாகிச் சங்கரித்தாளென்று சந்தேகித்துச் சொல்லுகின்றேன் நமதுகுல முதல்வனாகிய பாதாளத்தில் வசிக்கின்ற மகாபலிச்சக்கிரவர்த்தியோடு நாமுங் கவலையற்று வாழ்ந்துகொண்டிருப்போமென்று கூறச் சண்டாசுரன் கேட்டு நகைத்துப் பெண்மதியாற் பிதற்றுகின்ற பேதையே நின்மொழிக்கிசையேன் காளியைக் கொன்றாலன்றி யான் திரும்புவதில்லை நீபோய் உயிர்பிழையென்று மனைவியைக் கோபித்துத் தேரிலேறிச் சோதிவனத்தையடைந்து தேவிசாலபுரத்தில் வசித்திருந்த சத்தமாதர்களோ டெதிர்த்து யுத்தஞ்செய்ய அம்மாதர்கள் ஆற்றாது தங்கள் சேனைகளோடு நாற்றிக்கிலும் ஓடியொளித்தார்கள் சண்டாசுரன் சோதிவனத்தின் கீழ்ப்பக்கத்திற் றவமியற்றும் பத்திரகாளியைக்கண்டு நிராயுதையாயிருக்கிற இவளைக்கொல்ல இதுவே நல்லதருணமென்று வில்லைவளைத்துச் சரமாரிதூற்ற அவன்சேனைவீரர்களும் அநேக அக்கினிபாணங்களை விடுத்தார்கள் பத்திரகாளி சமாதிநீங்கிச் சத்துருக்கள் சூழ்ந்து சரமாரிபெய்வதையும் தன்மேல் அக்கினிச்சுவாலை தகிப்பதையுங் கண்டாள், இவ்விடத்திருந்து தவமியற்றின் முற்றாதென மதித்து அவ்வனத்தின் தென்றிசைக்கட்சென்று யோகமாயையினால்

அரூபியாகித் தவநிலையி னின்றாள் ஆதலால் அவ்வம்மைக்கு அரியநாயகி என்றும் அத்தலத்திற்கு உருவாட்டி என்றும் பெயராயின.

சண்டாசுரன் பத்திரகாளியைக் காணுமற் றேடி வருந்தி யவ்வனத்தின் ஓர் பக்கத்தில் அருவமாய் நின்று தவமியற்றக்கண்டு இவள்மேல் பற்பல ஆயுதங்களுஞ் செல்லாதென்று நிச்சயித்து இவளை வெல்லத்தக்க உபாயமொன்று கருதிச் சூறைக்காற்று யுருவங்கொண்டு அக்கினியை மொண்டு கொண்டுவந்து காளிமேல் வீசித்தகிக்கப் பத்திரகாளி பொறுக்கமாட்டாமற் பரமசிவனைத் தியானித்து இத்தருணம் அருள்வாயென்று பிரார்த்திக்கப் பரமசிவன் ஆகாயத்தில் அசரீரியாய் நின்று பத்திரகாளி உனக்காக நீர்நிறைந்த தடாகமொன்று கற்பித்திருக்கின்றோம் அதில்மூழ்கி வெப்ப மொழிவாயென்றருள அப்படியே காளியத் தடாகத்துண்மூழ்கி வெப்பநீங்கினாள். மறுபடியும் பத்திரகாளி சண்டாசுரனால் வருத்தப்படாத உருவத்தை யளிப்பாயென்று வேண்டப் பரமசிவன் அவனால் வருத்தப்படாத பூதவுருவைக் கொடுத்தருளினார். பத்திரகாளியும் பூதவுருக்கொண்டு அவ்வனத்தின் மேற்குப்பக்கத்திற் சென்று தவமியற்றினாள். அவ்வுருக்கொண்ட அம்மைக்குப் பெரியநாயகி என்றும் அத்தலத்திற்குத் தாலவனமென்றும் அவள்மூழ்கிய குளத்திற்குப பாற்குளமென்றும் பெயராயின. பூதவுருக்கொண்ட தலத்திற்குப் பூதபுரமென்று பெயர்.

சண்டாசுரன் தம்பியர்களோடு சூழ்ந்துகொண்டு அம்புமாரிபெய்ய அக்கணைகள் அவள்மேற் செல்லாது திரும்பியதைப்பார்த்து அசுரரெல்லாம் காளி மடிந்தா ளென்று யுத்தநீங்கி அவ்வவரிடஞ் சென்றார்கள். பத்திரகாளியானவள் சண்டாசுரன் யுத்தத்தில் தோன்றவேண்டு மென்று பரமசிவனைநோக்கி அருந்தவம் புரியப் பரமசிவன் பிரசன்னமாகி உனது பகைவன் யுத்தத்தில் உன் கண்களிற் றோன்றுகவென்று வரமளித்தார். அவ்வரம் பெற்றமையாற் கண்ணுடையவளென்று பேர்பெற்று அவ்வனத்தின் வடபாற் சென்று சண்டாசுரன்பாணங்களால் வருந்தாத பூதவுருவையும் அவனைக்காணும் வரமும் பெற்றேன் இனிச் சண்டனைவெல்வது திண்ணமென்று நினைத்து ஒரு அட்டகாசஞ் செய்தாள். அவ்வொலி கேட்டவுடன் சத்தமாதர்களுஞ் சேனைகளோடு சூழ்ந்தார்கள் அக்காலத்தில் அம்மையுடைய கர்ச்சனைக்கஞ்சியோடிவந்த ஒரு மான்கன்றை இரட்சித்ததால் அவ்வம்மைக்குச் சாரங்கநாயகி யென்றுபெயர். அம்மையானவ ளிப்படியிருக்கச் சண்டாசுரன் மாயாபுரஞ்சென்று எமக்காற்றாது பத்திரகாளியும் மூவுலகத்தாரும் முறிந்தோடினார்கள். எம்மை யொப்பா ரொருவரு மில்லையென்று கர்வித்திருந்தான்.

இப்படி யிருக்கையில் ஒருநாள் நாரதமுனிவர் அம்மார்க்கத்தில் செல்லச் சண்டாசுரன் கண்டு ஓ முனிவரே என்னை வெல்லவந்த காளியை வேரோடு களைந்தேன் பார்த்திரோ வென்று பெருமிதம்பேச முனி

வர் நகைத்து உன்னைக்கொல்ல இருக்கின்றவளை இறந்தாளென்பது சரியோ நன்றாயறியாமற் பிதற்றுகின்றாயெனமுனிவர்கூறச் சண்டாசுரன் தாரகனைப்பார்த்து நாம் வெற்றிபெற்றதும் பொய்யோவென்று சொல்லுந் தருணத்தில் ஒற்றர்கள்வந்து தாழ்ந்து கூறுகின்றார் பத்திரகாளியானவள் சேனைகள் புடைசூழக் கடல்போன்ற நிறத்தோடு வீற்றிருக்கின்றாளெனச் சண்டாசுரன் கேட்டு மனம்புழுங்கித் தன்னிடக்கண்கள் துடிப்பதையும் மனைவிமொழிந்த வசனத்தையும் ஆலோசித்துக் கண்களில் அக்கினி சுவாலிக்கப் பற்களைக்கடித்து மனங்கொதித்துத் தேரேறிப் பற்பல ஆயுதங்களோடும் போர்க்கெழத் தாரகனாதியெழுவர்களுந் தங்கள் இரதங்களிலேறி நால்விதப்படைகளும் புடைசூழ எவ்வுலகமு நடுங்க வெழுந்தார்கள்.

அசுரப்படைகள் போர்க்கெழு முழக்கத்தைப் பத்திரகாளி யறிந்து வேல் சூலம் முதலிய பற்பல ஆயுதங்களோடு வேதாளத்தி லேறினாள். சாமுண்டி பிரேதவாகனத்திலேறினாள். அபிராமி யன்னவாகனத்திலும் மாகேசுவரி இடபவாகனத்திலும் கௌமாரி மயில்வாகனத்திலும் வைணவி கருடவாகனத்திலும் வாராகி சிங்கவாகனத்திலும் மாகேந்திரி யானைவாகனத்திலும் அவ்வவர்க்குரிய பற்பல வாயுதங்களோடும் ஏறினார்கள். இத்தன்மையாய்ச் சத்தமாதர்களோடும் பத்திரகாளி எதிர்ந்தபோது இருதிறப்படையும் யுத்தகளத்தி லெதிர்த்தன.

அக்காலத்தில் சண்டாசுரனுடைய கொடியின்மேல் பருந்து வீழ்ந்தது. குதிரைகள் கண்ணீர் விட்டன. ஆகாயத்தினின்று இரத்தமழைபெய்தது. சண்டாசுரன் ஒன்றையும் நினையாமல் பத்திரகாளிசேனையிற் பாய்ந்து கலக்கப் பத்திரகாளிசேனைகள் அசுரசேனைகளைப் பிளந்து இரத்தபானஞ் செய்தன. இவ்வாறு இருதிறப்படைகளும் மடிய இரத்தவெள்ளாறோடிற்று: அதுகண்டகும்பன் கணங்களை வளைத்தான். அபிராமிகண்டு அவன் அம்புகளை விலக்கித் தண்டாயுதத்தாலவன்சிரசிற் புடைக்க அவன்சிரம் ஆயிரந் துண்டுகளாய்ப் பிளக்க மரணமடைந்தான், கும்பன்மாண்டதை உத்தண்டனுணர்ந்து கணைமாரி பெய்ய மாகேசுவரி அவனை யெதிர்த்துச் சூலத்தினால் மார்பிற்குத்திச் 'சங்கரித்தாள். பூதகணங்கள்" நடுங்கப் போர்புரிந்த வீமாக்கனைக் கௌமாரி வேலினாற் குத்தி மடித்தாள். வைரவசுவனை வைணவிகொன்றாள். சாகினிகளோா டெதிர்த்த மகோதரனை வராகி அங்குசத்தினால் முடித்தாள், வீரனை மாகேந்திரி வச்சிராயுதத்தாற் சிதைத்தாள். தம்பியர் அறுவரும் இறந்தமைகண்ட தாரகன் கோபித்துப் அநேகபாணங்களைச்சிதற அபிராமிமுதலிய அறுவரும் சிதறியோடச் சாமுண்டிகண்டு கத்திகேடகம் உலக்கை சூலம் முதலிய ஆயுதங்களைக் கைக்கொண்டு சிங்கநாதஞ்செய்து அசுரசேனையிற் பாய்ந்தாள் தாரகாசுரன்கண்டு அநேக பாணங்களைத் தூற்ற அவைகளை யெல்லாஞ் சூலத்தாற் கண்டித்து அவன் தேர்ச்சாரதியையும்

குதிரைகளையும் உலக்கையா லடித்துக் கொன்ருள். தாரகாசுரன் தேரைவிட்டு ஆகாயத்திற் கிளம்பி ஆயி ரம்பாரமுள்ள ஒரு இருப்புலக்கையைச் சாமுண்டி வாகனத்தின்மேல்வீச அவ்வுலக்கையைத் தன்கைச் சூலத்தால் முறித்துவிடச் சாமுண்டிமேல் தண்டா யுதத்தை வீச அதையும் வேலினுற் றூளாக்கினுள். தாரகனுடைய கையாயுதங்க ளெல்லாஞ் சிதறிப்போக மாயையினுல் ஆகாயமும் பூமியும் மறைக்கும்படி யான பேருருவமும் சிறுகுழந்தை போன்ற ஒரு சிற் றுருவமுமாய்த் தண்டாயுதங் கொண்டு சாமுண்டி யிடஞ் செல்லச் சாமுண்டியும் பெரிதும் சிறிதுமான உருவங்களை யடைந்து சிவபெருமானருளிய சூலத் தாலும் மற்ருெரு சூலத்தாலும் அவனுடைய இரண் டுருவையும் ஒரேகாலத்திற் பிளந்து, கள் ஸ்கவிழ்த்தாற் போன்ற இரத்தங்குடித்து ஆரவாரித்தாள், பூதகணங் கள் கர்ச்சித்தன, அசுரர்கள் திசைதோறும் நடுங்கி யோடினர்கள் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

சண்டாசுரன் துணைவ னிறந்தமைகண்டு மனங்க லங்கித் தேறிப் பற்பல ஆயுதந்தாங்கி ஆகாயத்திற் கிளம்பி அண்டங்களிடியும்படிச் சிங்கநாதஞ் செய் தான். பத்திரகாளியும் மூவுலகமும் போர்க்கும்படி யான பேருருவடைந்து மூவுலகத்துள்ள எவ்வுயிர்க ளும் நடுங்கும்படி ஆரவாரித்து வடவைத்தீயு மஞ்சும் படிக் கண்களில் நெருப்பெழ விழித்துக் கோபித் தாள். சண்டாசுரன் மலையைநிகர்த்த வில்லைவளைத்து

அநேகபுராணங்களைப் பொழியப் பத்திரகாளி சூலத்தால் விலக்கிவிடச் சண்டாசுரன் யானையுருவா யெதிர்க்கப் பத்திரகாளி சிங்கவுருக்கொண்டு பிளந்தாள், சண்டாசுரன் சிங்கரூபமாய் எதிர்க்கப் பத்திரகாளி சரபவுருக்கொண்டு மாய்க்கச் சண்டனுஞ் சரபவுருக்கொள்ளக் காளியும் பேரண்டமாய் மடித்தாள் சண்டனும் பற்பல மிருகரூபங்க ளெடுக்கப் பத்திரகாளியும் அவற்றிற்குப் பகையாகிய மிருகவுருக்கொண்டு வெல்லச் சண்டாசுரன் பெருமூச்சுவிட்டு நான் செய்த மாயையையெல்லா மழித்தாள் இவளை வெல்லுவ தெப்படி நாம் இவளை எதிர்க்காவிடினும் இவள் நம்மைக் கொல்வதிற் சந்தேகமில்லை என்று நினைத்துக் காளியேயுனக்கு இயமனென்று மனைவி கூறியதையுந் தடுத்தேன் இனி யோசிப்பதிற் பயனென்ன ஆனதாகட்டுமென்று' துணிந்து சண்டாசுரன் பத்திரகாளியை நோக்கித் திரிமூர்த்திகளையும் வென்ற என்னோடு யுத்தஞ்செய்ய வந்தாய் உனைக்கொல்லாமல் விடுவேனே பெண்ணாகிய வுன்னைக்கொன்றும் பழிப்பல்லது புகழுண்டோவென்றான். இச்சொல்லைக்காளி கேட்டுத் தன்னைப்புகழ்ந்த பதரே உன்கழுத்திற் காலபாசம் வீழ்ந்திருப்பதைப்பார் நீ தப்புவதெங்கே என்றாள். இம்மொழிகேட்ட சண்டாசுரன் ஆயிரங்கோடி சண்டாசுரனாய்த் தோன்றி வில்லைவளைத்து ஆயிரங்கோடி மோகனாத்திரங்களை ஏவப் பத்திரகாளியும் அநேகமாயிரங்கோடி உருவங்கொண்டு ஒவ்வொரு சண்டனுக்கும் ஒவ்வொரு காளியாய் நின்று சூலாயுத

த்தாற்குத்தி வீழ்த்தச் சண்டாசுரன் விசுவரூபங்கொ
ண்டு எதிர்க்கப் பத்திரகாளியும் ஆகாயம் பூமிஎங்கும்
நிறைந்த விசுவரூபங்கொண்டு சண்டாசுரனைச் சூலத்
தாற்குத்திச் சின்னபின்னமாக்கித் திக்குகள் தோ
றும்போய் விழும்படி வீசினுள் அவனுடல்கள் மீறு
படியும் ஒன்று சேர்ந்து எதிர்ப்பதைப் பத்திரகாளி
பார்த்து இதென்ன ஆச்சரியம் இவனைச் சிவபெரு
மானுடைய சூலாயுதமுங் கொல்லாதென்றால் இவனை
வெல்லுவ தெப்படியென் றுலோசித்து நிற்கையில்
வாயுபகவான் அரூபியாய் வந்து நின்று பரமசிவனுக்
கினியால்வந்தேன் கிரௌஞ்சத்தீவின் மத்தியில் பஞ்
சசிருங்க மென்ெறொரு மலையுண்டு அந்த மலையில்
ஒரு பெருங்குகை யிருக்கின்றது. அதில் ஐந்து சர்ப்
பங்க ளிருக்கின்றன. அவைகள் சண்டாசுரனுக்
குயிர்நிலையாதலால் அவைகளையும் ஏககாலத்தில் இவ
னுடலோடு சேர்த்து வெட்டினுல் மாய்வனென்று
சொல்லப் பத்திரகாளி சண்டாசுர னுயிர்நிலையை
யறிந்து மகிழ்ந்து சாமுண்டியைப் போர்புரியும்படி
யுத்தகளத்தில் நிறுத்திக் கைச்சூலத்தையும் ஊன்றி
விட்டு வேதாள வாகனத்திலேறி மாதர்க ளறுவரும்
முன்செல்ல அசுரர்கள் அறியாமற்சென்று பஞ்சசிரு
ங்கபர்வதக் குகையையடைந்து கண், குதம், காது,
புலி, மூக்கு, இவைகளில் முறையே விடத்தையுடைய
ஐந்து சர்ப்பங்களையுங்கண்டு அவைகளைப் பிடித்துக்
கொண்டு வரும்படி பத்திரகாளி யேவ வைஷ்ணவி
யின் வாகனமாகிய கருடன் அவைகளைப் பிடித்துக்

கொண்டு வந்தான் உடனே பத்திரகாளியும் சேனை களும் ஆகாயமார்க்கமாய் அதிவேகத்தோடு யுத்த களம்புகுந்து பார்க்கும்போது தேரினின்று வீழ்ந்த சண்டாசுரன்மேல் சாமுண்டி ஏறிமிதித்துக்கொண்டு நின்ருள். அப்போது பத்திரகாளி ஐந்து சர்ப்பங் களேயும் வாங்கி யவன்மேற் போட்டுத் தன் கையி லுள்ள பெருஞ் சூலத்தாற் குத்தச் சண்டாசுரன் உயிரைவிட்டான்.

இவ்வாறு தேவகண்டகனுகிய சண்டாசுரனேக் கொன்றருளிய பத்திரகாளி பண்டாசுரனேச் சங்க ரித்த லளிதா தேவியை நிகர்த்து விளங்கினள். சாமுண்டியாதியாகிய சத்தமாதர்களும் பணிந்தார் கள். உலகம் யாவையும் ஈன்றவளே பிரமா முதலி யவர்க்கு மைந்தொழி லியற்றத் தலைமை யளித்த வளே முற்காலத்துப் பண்டாசுரனேக் கொன்று எங் களே இரட்சித்தவளே இன்றும் சூலினியாய்ச் சண் டாசுரனேக் கொன்று இரட்சித்தவளே போற்றி என்று பற்பல தோத்திரங்களேச் சொல்லிப் பிரமா விஷ்ணு இந்திரன் முதலிய தேவர்களெல்லாந் துதிக் கப் பத்திரகாளி தேவர்களேப்பார்த்து இன்னும் உங் கட்கு வேண்டிய வரங்களியாவு மளிப்போம். நீங்கள் உங்கள் பதங்களேயடைந்து சுகமாய் வாழ்ந்திருங்க ளென்று அனுக்கிரகஞ் செய்தாள்.

சத்தமாதர்களேப் பார்த்து அசுரசேனையை வளே த்துப் போர்செய்து கொன்று இரத்தமாமிசங்களே

யுண்டு மயங்கினீர்கள். உங்களுக்கு அறுசுவையையு
டைய அன்னத்தையளிப்போம் எல்லாரும் புசியுங்க
ளென்று சொல்லிக் காமதேனுவைப்போலச் சற்று
நேரம் நிட்டையிலிருந்தாள். அக்கணமே பற்பல
கறிவர்க்கங்களோடும் பண்ணிய வகைகளோடும் அன்
னமுண்டாக அச்சேனையிலுள்ள பூதகணங்கள் முத
லிய எல்லாம் விழுங்கி மென்று தின்று மகிழ்ந்தன,
பத்திரகாளி வெற்றிகொண்ட இடத்திற்கு வெற்றியூ
ரென்றும் எத்தலத்தில் சண்டாசுரனுடைய தேர்க்
கொடி முறிந்ததோ அத்தலத்திற்குக் கொடிக்குள
மென்றும் சண்டாசுரனுடைய சரங்கள் வீழ்ந்த இட
த்திற்குச் சராளியென்றும் அவன் மாய்ந்த இடத்திற்
கு மாளக்கண்டா னென்றும் தேவர்கள் பத்திரகாளி
மேல் பூமாரி பொழிந்த இடத்திற்குப் பூங்குடியென்
றும் பேர்வழங்கும். சத்தகன்னியர்களோடு பூதகண
ங்களுக்கு அன்னமிட்டதினால் அன்னபூரணி யென்
றும் எங்கும் நிறைந்து நின்றபடியால் மகாகாளியென்
றும் பெயராம்.

சண்டாசுரன் வதைத்தபடல முற்றிற்று.

---

## கா-வது. காளி பூசனைப்படலம்.

பத்திரகாளி சண்டாசுரனை வதைத்த சரித்திரத்
தை மொழிந்தோம். இனிப் பரமசிவனைப் பூசித்த
சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌன

காதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

சண்டாசுரனைச் சங்கரித்தபின்பு திருமால் முதலிய தேவர்களும் சத்தமாதர் முதலிய சேனைகளும் புடைசூழ மகாகாளி சோதிவனத்தையடைந்து வாசனைமிகுந்த மலர்மரங்களையும் பூங்கொடிகளையும் ஆறுபருவங்களிலும் மலர்ந்து விளங்குகின்ற பூஞ்சோலைகளையும் தேன்பொருந்திய பற்பல மலரோடைகளையும் தடாகங்களையும் பரமசிவனைத்தியானிக்கின்ற பற்பலமுனிவர்களையும், சிங்கமும், யானையும், புலியும், மானும் உறவுகொண்டு விளையாடுவதையும் பாவத்தை யொழித்து ஞானத்தைக் கொடுக்கத்தக்க பற்பல புண்ணிய தீர்த்தங்களையுங்கண்டு மகிழ்ந்து பரிசுத்தமனத்தோடு சிவகங்கையில் மூழ்கி அகக்கண்ணினால் பிரமசிவனுடைய அகண்டபரஞ்சோதியுருவைக்கண்டு ஆநந்தித்து முக்காலமு முணர்ந்த முனிவரும் அறிதற்கரிய பரமசிவனே உம்மை இப்பொழுது பூசிக்க விரும்புகின்றேன் தேவரீர் அகண்டவடிவநீங்கி இலிங்க வுருவாய்விளங்கினால் பூசிக்க எளிதாமென்று பிரார்த்தித்துநிற்க அவள் மகிழும்படி சகளம் நிட்களம் என்ற பேதத்தினால் இரண்டு இலிங்கவுருவாய்த் தெற்கும் வடக்குமாய்த் தூல சூக்குமமாய் வீற்றிருக்கக் கண்டு சிவபெருமானுடைய அருளைவியந்து சிவலிங்கங்களிரண்டிற்கும் விதிப்படி சத்திபீடம் நாட்டிச் சூக்குமலிங்கத்தின் வடபக்கத்தில் வீரசத்தியையும்

தூலலிங்கத்திற் கீசானியத்தில் மநோன்மணிசத்தி யையுந் தாபித்து அதன் தென்மேற்கில் ஒரு புண்ணிய தீர்த்த முண்டாக்கி அதில் மூழ்கிப் பட்டுடையும் பல பூணும் தரித்து, விபூதிருத்திராட்ச மணிந்து மந்தார வனமொன்றுண்டாக்கி அதன்மலரும் இன்னும் பற்ப லமலர்களும் வில்வமுங்கைக்கொண்டு சூக்குமலிங்கத் தில் பரமசிவனை யாவாகனஞ்செய்து ஆசனமுதலிய வளித்து அபிடேகஞ்செய்து பீதாம்பரஞ்சாத்தி இர த்தினுபரணங்களை யணிந்து சந்தனமும் பூமாலையு மணிந்து ஆயிர நாமார்ச்சனைசெய்து தூபதீப கை வேத்திய முதலிய சோடசோபசாரங்களை விதிப்படி செய்து வீரசத்தியையும் பூசித்துப பரமசிவனை உள முருகித் துதிக்கும்பொழுது காளியானவள் கருமை நீங்கிப் பொற்கொடிபோன்ற உருவத்தைப்பெற்றாள். தேவர்களெல்லாம் அவளுக்குச் சுவர்ணவல்லி என்று ம் காளியால் பூசிக்கப்பட்ட சூக்குமலிங்கத்திற்குக் காளீசரென்றும் பெயர் புகன்றார்கள் அவ்வம்மையா னவள் கரியவடிவையுடைய பத்திரகாளியாகவும் அவ் வாலயத்தின் புறத்தில் வீற்றிருந்தனள். பின்பும் சுவர்ணவல்லியானவள் தூல சூக்கும இலிங்கங்களை யருச்சிக்கும் பொருட்டு உமை என்றும் கௌரியென் றும் இரண்டு வடிவமானாள் அவர்களுள் உமையென் பவள் தூலலிங்கத்தை விதிப்படி யருச்சித்துத் துதித் தாள் அவ்வுமை மனமகிழும்படி பேரழகுபொருந் திய யௌவன வடிவா யிளநகையோடு சோமேசர் எதிரிற்றோன்றி நின்று எனது நாயகியே நின்னிச்சை

யை நவில்வாயென்றுகூற எனது நாயகரே உம்மைப் பிரிந்திருத்தலைப் பொறுக்கேன் என்னை ஐக்கியஞ் செய்துகொள்ளவேண்டும் இதுவே என்கருத்தென்று கூறச் சிவபெருமானும் அப்படியே யருள்செய்து தூலலிங்கத்தில் மறைந்தருள அவ்வுமையவளும் அவ் விலிங்கத்திலேயே ஐக்கியமாயினள், உமை ஐக்கிய மானதால் அந்தத் தூல லிங்கத்திற்குச் சோமேச ரென்று பெயராயிற்று. பின்பு கௌரி என்பவள் சோமேசராலயத்திற்கு முன்பு ஒருதீர்த்தம் தன் பெயரால் உண்டாக்கி அத்தீர்த்தத்தில் மூழ்கிச் சூக்கும லிங்கமாகிய காளீசரையும் வீரசத்தியையும் பூசித்துச் சோமேசரையும் சௌந்தரநாயகியம்மையையும் பூசித்துத் துதித்து நிற்கக் காளீசரானவர் மிக்க அழகுநிரம்பிய யௌவனவுருவத்தோடு எழுந்தருளிநின்று கௌரியைநோக்கி நின்பூசைக்கு உவந்தோம் நின்னெண்ணம்யாதென வினவக் கௌரி, யான் உமது ஆக்கினையின்படி கரியவுருவத்தையுடைய காளியாகிச் சண்டாசுரன் முதலிய அசுரர்களைச் சங்கரித்துத் தேவர்களைக் காத்தேன் உமதருளால் எனது கோர ரூபமும் நீங்கப்பெற்றேன். இனி யும்மைப் பிரிந்திருக்கச் சகியேன் இக்கணமே மணம் புரிந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க கௌரியே அங்ஙனமே செய்வோமென்று திருவாக்கருள அக்கௌரியும் ஆநந்தக்கடலில் மூழ்கி யவ்விடத்திருந்தாள்.

காளிபூசனைப்படல முற்றிற்று.

---

## எ-வது. திருமணப்படலம்.



பத்திரகாளி பரமசிவனைப் பூசித்த சரித்திரத்தை மொழிந்தோம் இனிச் சுவர்ணவல்லி கல்யாண சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

மூவுலகத்திலுள்ள யாவரும் சிவபெருமானுள்ளக் குறிப்பையுணர்ந்து சுவர்ணவல்லியுடைய திருமணத்தைக் கருதித் தங்கள் மனைவியர்களோடு வருவாராயினர் திருமாலும் பிரமதேவரும் வயிரவாதி உருத்திர கணங்களும் அட்டவித்தியேசுவரர்களும் சத்தகோடி மந்திரதேவர்களும் தேவேந்திரனும் மற்றத்தேவர்களும் திக்குப்பாலகர்களும் வசுக்கள் கின்னரர் இயக்கர் சித்தர் கருடர் காந்தருவர் துவாதசாதித்தர் சந்திரன் நக்ஷத்திரகணங்கள் சப்தரிஷிகள் சனகாதிநால்வர் பதஞ்சலி வியாக்கிரபாதர் நந்திதேவர் முதலிய சிவகணங்கள் நாகர்கள் மானிடர்கள் சரசுவதி இலக்குமி சுகேசி திலோத்தமை மேனை தேவர்மனைவியர் அகத்தியராதி முனிவர் மனைவியர்கள் நாககன்னியர்கள் மற்றையமாதர்கள் முதலிய யாவரும் குதூகலத்தோடுவுந்து சேர்ந்தார்கள். அவர்களாற் சூழப்பெற்ற சோதிவனமானது பரமசிவனுடைய விவாகமகோற்சவகாலத்தில் விளங்கிய கைலாசகிரியை ஒத்திருந்தது.

அப்போது பிரமாவானவர் மயனேயழைத்துக் காளீ சுவரருக்கும் சுவர்னவல்லிக்கும் விவாக நடக்கிறபடியினுலே பற்பல மண்டபங்களும் மாளிகைகளும் கோபுரங்களும் நொடிப்போழ்தினி லியற்றென்று கூற மயனும் நீலமணியினுல் வேதிகையிட்டு மாணிக்கத்தாற் றூண்கணட்டிச் சுவர்னப்போதிகை பொருத்தி வச்சிரத்தா லுத்திரம்போட்டு மரகதப்பலகை பரப்பிப் பவழத்தால் விமானமியற்றி மாணிக்கத்தாற் கலசங்கணிறைத்துச் சுவர்ணத்திறுற் பலகணிக ளமைத்துப் பொன்னரிமாலே மாணிக்கமாலேகளுந் தூக்கிப் பொற்கமுகு வாழை பூரணகும்ப முதலியனவைத்து அலங்கரித்தான், தேவர்களெல்லாரும் அவ்வவருக்கமைக்கப்பட்ட இருக்கையிற் புக்கார்கள் பிரம்ாவும் திருமாலும் சிவபெருமான் முன்சென்றுபணிந்து திருமஞ்சனச்சாலேக் கெழுந்தருள வேண்டுமெனச் சிவபெருமான் முகமலர்ச்சியோ டெழுந்தருளினுர். பரமசிவனே இரத்தினபீடத்திலிருத்திப் பிரமாவானவர் கௌரிதீர்த்தத்தா லாட்டத் திருமால் ஈரம்புலர்த்தி கவரத்தினப் பொற்பட்டாடையும் விபூதிருத்திராக்க முஞ்சாத்தி இரத்தினாபரணங்களேப் பூட்டிச் சந்தன புஷ்பங்களா லலங்கரித்து அக்காலத்துத் தேடியறியாத திருவடிகளேத்தொட்டுப் பனிநீரால் விளக்கினிற்கவுந் தேவர்முனிவர் யாவருஞ் சூழ்ந்து மறையோதவும் மங்கலகீதம் பாடவும் பரமசிவன் இரத்தினபீடத்திலெழுந்தருளி யிருந்தார்.

சுவர்னவல்லியை இலக்குமி சரசுவதிஎன்னும் இருவரும் மங்களநீராட்டி நவமணிகோத்த பொற்பட்டாடை புனைந்து பொன்னடிக் கமலங்கட்குப் பாதசாலம் கிண்கிணி தண்டையிட்டு இடையில் ஏழுகோவை மேகலாபரணஞ் சாத்தி அத்தகடகம் மோதிரம் வாகுவலயமுதலிய ஆபரணங்க ளணிந்து மூக்கணியிட்டு இருசெவிகளிலுங் குண்டலமிட்டு நெற்றியிற் றிலதமிட்டு நுதற்சுட்டிநாற்றி உத்தி பிறைமுதலிய தலையணி சார்த்திக் கற்பகப்பூமாலை யணிந்து பணிந்து நிற்கத் தேவமாதர்கள் போற்றப் பலவாத்தியங்கள் முழங்க மாதர்கள் மங்கலகீதம்பாடச் சுவர்னவல்லி மெல்லநடந்து, எம்பிரான்பக்கத்தி லமர்ந்தருளினுள். மேடமாதம் திரயோதசி உத்திரநட்சத்திரம் சோமவாரம்கூடிய சுபமுகூர்த்தத்தில் சுவர்னவல்லியைத் திருமாலானவர் மடிமீதிருத்திச் சிவபெருமானுடைய பாதத்தைவிளக்கி அந்நீரை முடிமீது தெளித்துக்கொண்டு பரமசிவனுடைய கையில் தன் சகோதரியாகிய சுவர்னவல்லியின்கரத்தை வைத்துத் தாரைவார்த்துப் பாணிக்கிரகணம் செய்வித்துக்கொடுத்தார் எம்பெருமான் மகிழ்ச்சியோடு ஏற்றருளினர். விண்ணவர் பூமாரி பொழிந்தார்கள் தம்பதிகள் அக்கினியை வலம்வந்து பொரியிட்டார்கள். முனிவர் ஆசீர்வதித்து அக்கதைகளைத் திருவடிகளிற் பெய்தார்கள். எம்பிரானது தோழனாகிய குபேரன் முனிவரர் யார்க்கும் ஆடையாபரணம் தட்சணை சந்தன தாம்பூல முதலியவற்றை முறைப்படியளித்தான்

எம்பெருமான் இந்திரன்முதலிய யாவர்க்கும் காட்சி கொடுத்து வீற்றிருந்தார். அக்காலையில் சுவர்னவல்லி யானவள் தலைவருடைய திருவுளக் குறிப்புணர்ந்து இரண் டுருவமாய்ப் பரமசிவன் முன்புநிற்கப் பரம சிவன் ஒரு பெண்ணோடு சூக்குமலிங்கத்திற் புகுந் தருளினார். அமரர்கள் அவ்விலிங்கத்தில் இடப்பா கம் சுவர்னவுருவும் வலப்பாகம் கருமையுருவுமாய் விளங்கக்கண்டு அதிசயித்து அவ்விலிங்கத்திற்குச் சுவர்னகாளீசுர ரென்று பெயரிட்டுத் துதித்தார்கள்.

சுவர்னவல்லியின் மற்றொரு சத்தியானவள் அவ் விலிங்கத்திற்கு வடபக்கத்திலுள்ள வீரசத்தியுள் பிர வேசித்தாள் வானவர்கள் கண்டுகளித்துத் துதித்தார் கள். பரமசிவன் அசரீரியாய் ஓ தேவர்களே சண்டா சுர சங்காரத்திற்காகச் சத்தமாதர்களாகிய நீங்கள் உங்கள் சுவயரூபங்களோடு அவ்வவரிடங்களிற் செ ன்று மகிழ்வோடிருங்களென்று திருவாக்கருள அம ரர் யாவரும் அவ்வவரிடஞ் செல்ல மகிழ்வுற்றிருந் தார்கள்.

திருமணப்படல முற்றிற்று.

## அ-வது. தேவர்கள் பூசித்தபடலம்.

சுவர்னவல்லி மணம்புரிந்த சரித்திரத்தை மொழி ந்தோம் இனித் தேவர்கள் பூசித்த சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்க ளேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார்.

திருமால்பிரமா இந்திரன்முதலிய தேவர்களெல்லா ஞ்சிவகங்கையென்னுந் தடாகத்தில் மூழ்கி விபூதியுருத் திராட்சமணிந்து பூசாதிரவியங்க ளனைத்துங் கைக் கொண்டு பரமசிவனுடைய சந்நிதியடைந்து ஆயிரம் பூரணகடங்கள் வைத்துப் பூசித்துச் செபித்து அந் நீராலும் பஞ்சகவ்வியங்களாலும் பழவர்க்கங்கள் சந் தனம் முதலியவைகளாலும் காளீசனையுஞ் சோமே சனையுஞ் வீரசத்தியையும் மனோன்மணியையும் அபி டேகம் புரிந்து விபூதியுருத்திராட்சமுஞ் சந்தனமும் பூமாலையுஞ் சாத்தி ஆயிரநாமார்ச்சனை புரிந்து தூப தீப நைவேத்தியமுதலிய சோடசோப சாரங்களு மியற்றிச் சிரசின்மேற் கைகளைக் குவித்துப் பஞ்சாட் சரத்தைத் தியானித்து மும்முறை வலம்வந்து சந் நிதியினின்று "நித்தனேயுமை நேசயு வேசனே முத்த னேயருட் காளீசனே" என்று துதித்து எம்பெருமான் றிருவருளைப் பெற்றார்கள் என்றுசொல்லிய சுமந்து முனிவனைநோக்கி யுவேசனென்று துதித்த தென்ன வென்று தேவவன்மன் கேட்கச் சுமந்து முனிவர் கூறுகின்றார். சிவபெருமானுடைய ஐந்துமுகங்களுள் கிழக்குமுகம் தற்புருடம், யௌவனபருவம், சுவர்ண நிறம், தென்முகம் அகோரம் முதுமைப் பருவம், கருமைநிறம், பச்சிமமுகம் சத்தியோசாதம் புருஷ ரூபம் சுத்தநிறம், வடக்குமுகம், வாமதேவம், பெண் மைரூபம், இரத்தநிறம் நடுமுகம் ஈசானம் இள மைப்பருவம், படிகநிறம், இவைகளில் கௌரியினது உள்ளக் குறிப்பை யுணர்ந்து கிழக்கு முகத்தின்

யௌவனத்தையும் தெற்குமுகத்தின் கறுப்பு வர்னத்தையும் பெற்றதனால் யுவேச காளீசனென்று பெயராகுமென்றார்.

இவ்வண்ணம் முனிவர்புகல அரசன் மகிழ்ந்து எவ்வெத் தேவர்கள் எவ்வெத் தலங்களில் சிவலிங்கங்களைத் தாபித்தார்கள் விரித்துரைக்குக வென்று பணிந்து வினவ முனிவர் கூறுகின்றார் திருமாலானவர் கண்டதேவி என்னுந் தலத்தில் ஒரு இலிங்கந் தாபித்தார் அதற்கு விண்டுவீச்சுரனென்று பெயர், சோதிவனத்தின் ஈசானியத்தில் ஒரு யோசனையில் சிருங்கபுரமென்னு மூரில் அகத்தியர் தன்பெயரால் அகத்தீச்சுரனென்னு மிலிங்கந் தாபித்தார் வசிட்டரும் அருந்ததியும் தங்கள்பேரால் இரண்டு இலிங்கங்களைத் தாபித்தார்கள் சோதிவனத்தின் கீழ்பக்கத்தில் தாரகனைக் கொன்ற இடத்தில் இந்திரன் தன் பெயரால் ஒரு இலிங்கத்தைத் தாபித்தான் அதற்கு நான்கு கடிகைதூரத்தில் தென்கிழக்கில் அகத்திய முனிவர் தன்பெயரால் ஒரு இலிங்கத்தைத் தாபித்தார். சோதிவனத்துக்கு நாற்கடிகை தூரத்தில் பிரமதேவர் தன்பெயரால் ஒரு இலிங்கத்தைத் தாபித்தார் அதற்கு முக்கடிகை தூரத்தில் அக்கினி திக்கில் இலக்குமியானவள் ஒரு இலிங்கத்தைத் தாபித்துப் பூசித்தாள்.

சோதிவனத்திற்கு அக்கினி திக்கில் தீக் கடவுள் இரண்டு இலிங்கங்களைத் தாபித்துப் பூசித்தான் அவ்

வனத்தின் தென்றிசையிலும் மேற்கிலும் அத்திசைகளின் காவலர்கள் இரண்டு இலிங்கங்களைத் தாபித்தார்கள் அவ்வனத்தின் மேற்கு நாற்கடிகை தூரத்தில் வெற்றியூரில் சரசுவதி ஒரு இலிங்கத்தைத் தாபித்தாள். சோதிவனத்தின் மூன்றுகடிகை தூரத்தில் சூரியனும் நாற்கடிகை தூரத்தில் சந்திரனும் தங்கள் பேரால் இரண்டு இலிங்கங்களைத் தாபித்தார்கள், பூங்குடி என்கின்ற தலத்தில் குபேரனும் அதன் கீழ்பக்கத்தில் மார்க்கண்ட முனிவரும் தங்கள் பேரால் ஒவ்வொரு இலிங்கங்களைத் தாபித்தார்கள். மற்றுள்ள தேவர்களும் முனிவர்களும் தங்கள் தங்கள் பெயரால் எண்ணிறந்த இலிங்கங்களைத் தாபித்தார்கள். இத்தன்மையாய்த் தேவர்களும் முனிவர்களும் பூசித்த இலிங்கங்களை உள்ளன்போடு போற்றினால் அறம் பொருள் இன்பம் வீடுமுதலிய புருஷார்த்தங்களுண்டாகும், இவ்வனமானது ஒவ்வொரு காரணங்கொண்டு பலபெயர்களை யடைந்திருந்தாலும் அவற்றுள் காளிபுரம் காந்தாரம் சோதிவனமென் றுச்சரிப்பவர்க்கும் கேட்பவருக்கும் நினைத்தன வெல்லாம் கொடுக்கும்.

தேவர்கள் பூசித்தபடல முற்றிற்று.

## ௧௩-வது. தேவதாசப்படலம்.

தேவர்கள் பூசித்த சரித்திரத்தை மொழிந்தோம் இனித் தேவிசாலபுரத்தில் வசித்த தேவதாச பாண்

டியன் சரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

பலவளங்க ணிறைந்த பாண்டிநாட்டில் தேவிசால புரமென்று ஒரு நகரமுண்டு அந்நகரத்தில் நற்கு ணங்க ணிறைந்தவனும் சைவபத்தியுள்ளவனுமான சந்திரவம்சத்திற் பிறந்த தேவதாச னென்னும் பெ யரையுடைய ஒரு பாண்டிய னிருந்தான். அப்பா ண்டியனைவன் காளீசனரயும் சுவர்னவல்லியையும் சோமேசரையும் சவுந்தரநாயகியையும் பிரதட்சணஞ் செய்து சாஷ்டாங்கமாய்ப் பணிந்து பஞ்சாக்கரத் தைத் தியானித்துப் பாடித்துதித்துக் காசியிற் செ ன்று கங்கை கொண்டுவந்து காளீசுவரருக்கு அபி டேகஞ்செய்யக் கருதித் தேவி சாலபுரத்தில் புத்தி ரனை முடிசூட்டி யுலகாளவைத்துவிட்டு மறையோ ரிடத்தி லநுமதி பெற்றுக்கொண்டு தன் பரிவாரங் கள் சூழப் புறப்பட்டுக் காசியைநோக்கிப் பற்பல தேசங்களும் நதிகளும் வனங்களும் மலைகளுங்கடந் து பற்பல காதங்கள்கடந்து சென்றும் காசியையடை யாது தளர்ந்து ஓரிடத்தில் நித்திரைசெய்யுங்காலத் தில் காளீசர் அவனதுகனவில் மறையவர்வடிவாய்த் தோன்றி அரசனே நீ அபிடேகஞ் செய்யக்கருதிய காளீசர்கோயிலின் பக்கத்தில் ஆக்கினேயதிக்கிலுள்ள தீர்த்தமானது பரமசிவனால் உண்டாக்கப்பட்டுப் பா தாள கங்கையினாற் கலக்கப்பட்டது. முற்காலத்தில்

அகத்தியர் முதலானோர் அத்தீர்த்தத்தை அபிடே கஞ்செய்து சித்திகளெல்லாம் அடைந்தார்கள். ஆத லால் நீயும் அத்தீர்த்தத்தால் அபிடேகஞ்செய்து மனந்தேறென்று சொல்லியமொழியை அரசன்கேட்டு அநேககாதங் கடந்துவந்துங் காசியை அடைந்தே னில்லை, நீவிர் சொல்லியவாறு மறுபடியுந் திரும்பிச் செல்வது எப்படியென்று அரசன்வருந்த அங்குள்ள ஒரு தடாகத்தைக்காட்டி இதில் மூழ்கினால் அவ்வி டஞ் செல்லலாமென்று சொல்லிவிட்டுப் பரமசிவன் மறைந்தருளினார். அரசன் விழித்தெழுந்து அத்தடா கத்தில் மூழ்கச் செல்லும்போது அவன் கனவிற்கண் ட மறையவர் மீட்டு நனவிலுந்தோன்றி அவன்கரத் தைப்பற்றி யிழுத்து அதில் மூழ்குவிக்க ஒரு கண நேரத்திற் சோதிவனத்திலுள்ள சிவகங்கையிலெழுந் தான். அத்தீர்த்தத்தி னடுவினின்றெழுந்தவுடன் கா ளீசராலயத்தையுங் கண்டு அங்குள்ளவர்கட்கெல்லாம் அவரது மகிமையைக்கூறிச் சங்கற்பஞ் செய்துகொ ண்டு அச்சிவகங்கையில் மூழ்கி விபூதியுருத்திராட்ச மணிந்து சுவர்னகடத்தில் தீர்த்தத்தை முகந்துகொ ண்டு காளீசருக்கு அபிடேகித்து நாநாவிதமலர்களைக் கைக்கொண்டு அருச்சித்துத் தூபதீப நைவேத்திய சோடசோபசாரங்களுஞ்செய்து பஞ்சாக்கரத்தை யுச்சரித்துப் பிரதட்சண வந்தனங்கள்செய்து அநச னிற்கையில் காளீசரானவர் முன்கண்ட மறையவர் வடிவாய்த் தோன்றிநிற்க அரசன்கண்டு ஆநந்தக்கண்

ணீர்விட்டு மெய்சிலிர்த்துப் பணிந்தெழுந்து நின்று கூறுகின்றான்.

காளீசரே மாலயற்கெட்டாத நின்றாட்டாமரைகளி லிடையறாத அன்பளித் தருள்வீரொன்று வேண்டச் சிவபெருமான் அவ்வரமளித்தோம் அஃதன்றியும் நமது சிவகங்கையி லாடுவோர்க்கு அவர்கள் கருதிய வரமனைத்து மீவோம் என்று திருவருள்புரிந்து சூக் குமலிங்கத்துட் புகுந்தருளினார். பின்பு அவ்வரசன் பரமசிவனடிக் கன்புபூண்டு தன்னகரடைந்து அர சாட்சியை யேற்று மனமகிழ்ச்சியோடிருந்தான். ஆத லாற் சிவகங்கையானது கங்கைக்கொப்பாகும். அத் தடாகத்தின் கிழக்கிலுள்ள அகத்திய தீர்த்தத்தில் மூழ்கினால் பாதகமனைத்தும் நீக்கி முத்தியைக்கொ டுக்கும் சிவகங்கைக்குத் தென்பக்கத்தில் உமையினு லாக்கப்பட்ட தீர்த்தமொன்றுண்டு, அதில் மூழ்கி னால் நினைத்தனவெல்லாஞ் சித்திக்கும். அச்சிவகங் கைக்குத் தென்மேற்கில் காளிதீர்த்த மிருக்கின்றது. அதில் மூழ்கினால் துன்பமனைத்து நீங்கும். சிவகங் கைக்கு மேற்கில் விஷ்ணுதீர்த்தம் மகா பரிசுத்தமுள் ளது. அத்தடாகத்தின் தெற்கில் சரசுவதிதீர்த்தம். அதில் மூழ்கிற் கல்வியனைத்துமுண்டாம். அதன் கிழக்கிலுள்ளது பிரமதீர்த்தம். அதில் மூழ்கிற் பிரம ஞானமும் ஆயுளுமுண்டாம். காளீசருடையவிடப் பக்கத்தில் கௌரிதீர்த்தம். அதில் மூழ்கினால் நினைத் தவெல்லாங் கைகூடும். அதன்கிழக்கில் இலக்குமி

தீர்த்தம். அதில்மூழ்கினல் சதுர்வித புருடார்த்தங் களையும் அடையலாம் என்று சூதபுராணிகர் சொல் லினர்.

தேவதாசபாண்டியப்படல முற்றிற்று.

---

## ௪0-வது. இலக்குமி சாபந்தீர்ந்தபடலம்.

தேவதாசபாண்டியன் சரித்திரத்தை மொழிந் தோம், இனி இலக்குமி சாபந்தீர்ந்த சரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதிமுனிவர்க ளே யென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

குறளுருவத்தையுடைய வாலகில்லியரென்னுந் தவ முனிவர்கள் ஒருயாகத்தைக் குறித்துத் திருமாலு டைய வைகுந்தத்திற்குச் சென்றார்கள். அப்போ தவர்களுடைய குரூபத்தை இலக்குமிகண்டு மனத்தி லிகழ்ந்தாள், அம்முனிவர்கள் அதையறிந்து நீ எங் களை யிகழ்ந்ததினல் மனிதப் பெண்ணுருகவென்று சாபமிட்டார்கள். இலக்குமி அம்முனிவர்சாபத்தை யேற்று வருந்தும்போது திருமால்கண்டு திருமகளே என்னுடைய மனத்தினைற் றெழுந்து போற்றத்தக்க அம்முனிவர்களுடைய சாபத்தை நம்மால் மறுக்கக் கூடுமோ ஆனலும் ஒரு உபாயஞ் சொல்லுகிறேன் பூலோகத்திலே பாண்டியநாட்டில் தேவரும் வணங் கத்தக்க சோதிவனமென்னும் ஓர் தலமுண்டு அத் தலமடைந்து காளீசரை நித்தமும் வணங்கினல் எவ்

விதமான பாவங்களும் நீங்கும் அத்தலத்திற் செல்வாய் யாமும் அவ்விடம் வருவோமென்றார்.

இலக்குமிகேட்டு மகிழ்ந்து மானிடப் பெண்ணாகிச் சோதிவனத்தை யடைந்தாள், அச்சோதிவனத்திலுள்ள கௌரிதீர்த்தத்தின் கீழ்த்திசையில் தன்பெயரால் ஒரு தீர்த்தமுண்டாக்கி அதிலும் சிவகங்கையிலும் மூழ்கிக் காளீசனை அன்போடு பூசித்து வணங்கித் துதித்தாள், இவ்வண்ணந் தினந்தோறும் பன்னிரண்டுவருடம் பூசித்தாள். அளவற்ற கருணையையுடைய சிவபெருமான் ஒரு சுக்கிரவாரதினத்தில் பிரத்தியட்சமா யெழுந்தருளி இலக்குமியே உனது பூசனையை யுவந்தோம். வாலகில்லியருடைய சாபமும் நீங்கி முன்னிலும் பதின்மடங்கான அழகுள்ள உருவத்தோடு திருமாலை யடைவாயென்று திருவாக்களித்து உன்னாலுண்டாக்கப்பட்ட தீர்த்தமும் இலக்குமி தீர்த்தமென்று பெயர்பெற்றுக் கங்கையின்மூழ்கின பலனை அதில் மூழ்கினோர் அடையக்கடவர் என்று வரமளித்து இலிங்கத்துட்புகுந்தார். இலக்குமியும் மனத்திலாநந்தித்து அத்தலத்தி லிருந்தாள்.

இப்படி யிருக்குங்கால் திருமாலானவர் வாலகில்லியர்களுடைய சத்திரயாகத்தை நிறைவேற்றி அவர்களநுமதிபெற்று அவ்விடத்தினின்று நீங்கிக் காளிபுரத்தை யடைந்து சிவகங்கையில் மூழ்கிக் காளீசனைப் பூசித்து வடமொழியினாற் றுதிக்கக் காளீசர் திருமாலுக்குக் காட்சிகொடுத்துத் திருமாலே இலக்குமி

யானவள் வாலகில்லியரால் பெற்றசாபநீங்கி முன்னி
லும் பதின்மடங்காக விளங்கினாள் அவளோடு சே
சித்து இங்கிருந்து எம்மைப் பூசித்துக்கொண்டிருக்
குக. நின்னாற்றுதிக்கப்பட்ட துதியை ஒருமுறை
யுரைத்தால் பஞ்சாட்சரத்தை நூறுதரம் செபித்தத்ற்
கொப்பாகுமென்று வரமளித்து இலிங்கத்துட் புகுந்
தருளினார். அத்திருமால் அக்கோயிற் புறத்தில் நிரு
தித் திசையிற் றமக்கோ ராலயத்தை யமைத்துக்
கொண்டு அதில் சுகந்தவனேசனென்று பெயர் பெற்
றுப் பரமசிவனைத் தினந்தோறும் பூசித்துவந்தார்,
அன்றியும் முற்காலத்தில் திருமால் தன் பகையாகிய
ஓர் அசுரனை வெல்லும்படிச் சக்கராயுதத்தை யேவச்
சக்கரமானது அவனை வெல்லாமையால் அத்திருமா
லின் சாபம் பெற்று ஒளிமழுங்கிற்று அச்சக்கரமா
னது பின்பு திருமாலுடைய ஆக்கினையால் சோதி
வனத்தை யடைந்து தன்பெயரால் சக்கரதீர்த்தமெ
ன்று ஒரு தீர்த்தத்தை யுண்டாக்கி அதிலும் சிவகங்
கையிலும் மூழ்கிப் பரமசிவனைப் பூசித்துச் சாபநீங்
கிற்று. சுதரிசன மென்னும் பெயரையுடைய சக்கர
தீர்த்தத்தில் மூழ்கினார்கள் மகாபரிசுத்தத்தை யடை
வார்கள். காளீசனை எண்டிசைப்பாலகரும் பூசித்துத்
தத்தம்பேரால் ஒவ்வொரு தீர்த்தமுண்டாக்கியிருக்கி
ன்றார், அவற்றின் பெருமைகளையுஞ் சொல்வோம்.
இந்திரதீர்த்தத்தில் மூழ்கினால் சவ்வகைச் செல்வமு
மோங்கும். இயமதீர்த்தத்தில் மூழ்கினால் தீர்க்காயு
ளுண்டாம். நிருதிதீர்த்தத்தில் மூழ்கினால் அச்சம் நீங்

கும். வருணதீர்த்தத்தில் மூழ்கினால் பிணியனைத்தும் நீங்கும். வாயுதீர்த்தம் ஆண்மையைக் கொடுக்கும். குபேரதீர்த்தம் பொருள் கொடுக்கும். ஈசானியதீர்த்தம் செல்வமும் புத்திரப்பேறும் ஆயுளும்கொடுக்கும். முத்தியுந்தரும் இன்னும் பற்பல பரிசுத்ததீர்த்தங்களுமிருக்கின்றன. அவற்றைப் புகழ்ந்துரைக்க அனந்தனாலு மாகாதென்றால் எம்மாற் புகழக்கூடுமோ.

இலக்குமி சாபந்தீர்ந்தபடல முற்றிற்று.

---

## ௧௧-வது. உருத்திரர் சாபந்தீர்ந்தபடலம்.

இலக்குமி சாபந்தீர்ந்த சரித்திரத்தை மொழிந்தோம் இனி உருத்திரசாபந்தீர்ந்த சரித்திரத்தைக் கூறுகின்றோம், கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார்.

கைலாயத்திற் சிவபெருமானைத் தரிசிக்கச் சங்காரருத்திரர் முதலிய ஆயிரங்கோடி யுருத்திரர்கள் அக்கையிலைக் குன்றத்தின் ஒருபாகத்திலுள்ள நந்தனவனத்தில் தங்கியிருந்து சிவபெருமானைக் கண்டு பணிந்து போற்றி அவருடைய கடாட்சம்பெற்று நின்றார்கள். அம்பிகையானவள் பெண்களோடு பூஞ்சோலையிற் பரிமளமலர் கொய்துகொண்டு வரும்போது அந்த ருத்திரகணங்களைக் கண்டாள்.

தலையிற் கங்கையும் நெற்றிக்கண்ணும் மான் மழுவும் விபூதி யுருத்திராட்சமும் அவர்கள் தரித்து

ரிற்பதைக்கண்டு சிவபெருமானை வேறறியாமற் சற்று யோசித்துத் தெளிந்து சிவபெருமானிடஞ் சென்று நின்றாள் அவ்வுருத்திரர்கள் தன்னைப் பணியாமை யையும் சிவபெருமானைப்போல வேட மமைந்திருப பதினாற் செருக்குற்றிருப்பதையு முணர்ந்து உருத் திரர்களே நீங்கள் என்னை மதியாமையால் இன்று முதல் அயிரை மீனாகுங்களென்று சபித்தாள்.

அவர்கள் நடுங்கிப்பணிந்து துதிக்க அம்மை இரங்கி உங்கள் சாபநீங்க ஒரு உபாயஞ் சொல்கின்றோம் பாண்டியநாட்டிலே கடலுக்கு மேற்குத் திருப்புத் தூருக்குத் தெற்கு உத்தரகோசமங்கைக்கு வடக்கு மதுரைக்குக் கிழக்கு இதற்குட்பட்ட சோதிவனத் தில் காளிபுரமென்று ஒரு தலமுண்டு அத்தலத்தில் காளீசர் சோமேசரென்று இலிங்கங்க ளிரண்டுண்டு. அத்தலத்தை யடைந்தால் சாபநீங்கு மென்றவுடன் அயிரையாகிக் கடலில் வசித்துக்கொண்டிருந்தார் கள். காளீசர் அவ்வயிரைகளை இரட்சிக்கச் சுவர்ண வல்லியோடு கீழ்கடற் கரையிலுள்ள வில்வவனத்தலத் தில் இலிங்கமாகி வீற்றிருந்தார்.

முற்காலத்தில் மிகுந்த வரம்பெற்ற துன்மதனென் னு மசுரனுக்குச் சாரன் கோரனென்னும் இரண்டு மைந்தர்க ளிருந்தார்கள். அவர்கள் தேவர்களையும் முனிவர்களையும் துன்பப்படுத்தத் தேவேந்திரன் அ வர்களைச் சங்கரிக்க எதிர்த்தான். அவர்களஞ்சிக் கட லில் மீனுயொளித்து நீர்வாழ்வனவற்றை வருத்த வரு

ணனெதிர்த்து அநேகநாள் யுத்தஞ் செய்தான். அவர்கள் அவ்வயிரைமீன்களைப் பட்சிக்கத்தொடங்கினர்: அப்பொழுது சுவர்ணவல்லி யருளால் வில்வவனேசர் சூலத்தாற்குத்த மாய்ந்தார்கள், பின்பு அவ்வயிரை மீன்களெல்லாம் ஒரு பரவன்வலையிற் பட்டுக்கொண்டன. அப்பரவன் அவைகளையெல்லாம் வற்றல்களாக்கி வாங்குவாரை எதிர்பார்த்திருந்தான்.

மதுரைப்பதியிலுள்ள அரவிந்த னென்னும் ஓர் வணிகன் பற்பல வணிகர்களோடு முத்துக்க ளிரத்தினங்கள் கொள்ளக் கீழ்கடற்கரைக்குவந்தான் அவ்வரவிந்தனுக்குப் பொருள் சொற்பமா யிருந்தமையால் பரவவீதி சென்று அவ்வயிரை மீன்களையெல்லாம் விலைக்குவாங்கிப் பொதிகள் கட்டிக்கொண்டு மதுரைநோக்கிச் சென்றான் செல்லுகையிற் பொதியெருதுகள் நடவாமற் காலோய்ந்துநிற்கச் சூரியாத்தமனமாயிற்று. அவ்வணிகன் இவ்வனத்தை நீங்கிச் செல்வது அரிதென்று காளிபுரத்தையடைந்து மீன் சுமைகளை யிறக்கிவைத்து அவ்விரவி லுறங்கினன். அருணோதயத்தில் காளீசர் தவமுனி வடிவாய்ச் சடைமுடிபுனைந்து, காலிற்பாதுகையுங் கையிற் பிரம்புங்கொண்டு தோன்றிக் கையிலுள்ள பிரம்பினால் மீன் மூட்டைகளைக் கட்டவிழ்த்துக் கூப்பிட்டுச் சடைக்கங்கையை வார்த்தார் உலர்ந்த மீன்களெல்லாஞ் சாபநீங்கி உருத்திரர்களாகி விளங்கின. அவ்வுருத்திரர்கள் மதியணிந்தசடையும் மான்மழுவுந் தரித்த பரம

சிவவுருவைப்பெற்று நாற்புறமு நோக்கி இவ்வன
மே சோதிவன மென்றும் இவ்விலிங்கமே அம்மையா
லருளப்பட்ட இலிங்கமென்றும் நிச்சயித்தார்கள் பர
மசிவன் அவர்கள் தரிசிக்கும்படி சகளரூபத்தோடு
நிற்க அவ்வுருத்திரர்கள் பணிந்து புகழ்ந்து ஐயனே
நின்னருளாற் சாபநீங்கப் பெற்றேம் அஞ்ஞான விரு
ளொழியும்படி நின்சுவரூபஞானத்தை யனுக்கிரகிப்பா
யென்று வேண்ட அவர்கள்முன் புன்னகையோடு
அருட்குருவடிவாய்த் தோன்றிப் பஞ்சபூதங்கள் முத
லிய எவ்வுருவும் தானாயும் அஃதன்றிப் பரிபூரண
மாயும் விளங்குகின்ற வேதரூபியாகிய சிவபெருமான்
விசுவரூபத்தை எடுத்தார். அவ்வுருவத்தில் சரா
சரங்க ளெல்லாவற்றையும் நோக்கித் தங்களேயுங்
கண்டு அச்சமுற்று அவரடியில் வீழ்ந்து இவ்வுருவை
யொடுக்கவேண்டு மென்று அவர்கள் போற்றச் சிவ
பெருமான் இளநகை புரிந்து நீங்கள் இவ்வடிவத்
தைத் தரிசித்தபடியால் யாவரும் வியக்கத்தக்கபேறு
பெற்றவரானீர்கள் இனி உங்களுலகத்தை யடைந்து
வாழ்ந்திருங்களென்று காளீசரநுக்கிரகித்த வாக்கியத்
தைக்கேட்டு ஆநந்தித்துப் பின்பு அவ்வுருத்திரர்கள்
தங்களுலகிற்குச் சென்றார்கள், காளீசரும் இலிங்கத்
துட் புகுந்தருளினார்.

மீன்முட்டைகளெல்லாம் உருத்திரர்களாயதை அர
விந்த னென்னும் வணிகன் கண்டு அதிசயித்துக்
கைப்பொருளும் மீன்முட்டையும் போய்விட்டன

வெறும்பொதியைக் கொண்டோ எனது நகரத்திற் செல்வேனென்று மனந்தளர்ந்து காளீசனைத்துதிக்க அவர் ஒரு சித்தர்வடிவாய் அவன்முன்றோன்றி வணிகனே உளம் வருந்தாதீர் சிறுகற்களைச் சும்மையாக்கி எருதின்மே லேற்றிக்கொண்டுபோய் வீட்டி லவிழ்த்தால் பொன்னாயிருக்கும் என்று திருவாக்களித்து மறைந்தருளினர். அவ்வணிகனும் அவர்மொழியை நம்பிக் கற்களனைத்தையும் வாரிப் பொதியி லிறுக்கிக்கட்டி எருதிலேற்றிக்கொண்டு சென்றான். அவ்வணிகன் மதுரையில் தன் வீட்டிற்சென்று பொதியை யவிழ்க்க மாற்றுயர்ந்த செம்பொன்னா யிருக்கக்கண்டு இதுவும் சித்தசாமியின் அருள்விளையாட்டென்று மகிழ்ச்சிக் கடலு ளாழ்ந்தவனாகி வனத்திடைச் சித்தசாமிவந்ததும் நடந்தவரலாறும் தனக்குச் செல்வமுற்றதும் வீரசேனபாண்டியனுக்கு அறிவித்துச் சைவ சமயத்தை மேற்கொண்டு அப்பொருள்களையெல்லாம் சிவனடியார்கள் உளங்களிப்ப நல்கிச் சிவபத்தியோடு வாழ்ந்திருந்தான்.

உருத்திரர்சாபந்தீர்ந்தபடல முற்றிற்று.

## கஉ-வது. வீரசேனபாண்டியப் படலம்.

உருத்திர சாபந்தீர்ந்த சரித்திரத்தை மொழிந்தோம் இனி வீரசேனபாண்டியன் சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

அங்கயற்கணம்மை யரசாண்ட மதுராபுரியில் சைவபக்தியோடு மிவ்வுலகை யாளும் வீரசேன பாண்டிய னென்பவன் அரசுபுரியுங் காலத்தில் அப்பாண்டியனுக்கு ஆயிரம் மனைவியரிருந்தும் புத்திரரில்லாமையால் மனவருத்தமுற்று நூலுட் சொல்லியவாறு பல பரிகாரங்களையுங் கன்னிகாதான முதலிய பற்பல தானங்களையுஞ் செய்து மீனாட்சி சோமசுந்தரரைப் பத்தியோடு பணிந்து புத்திரரில்லாத் துயர்க்கடலு ளாழ்ந்து மதுரைக்குத் தென்மேற்கிலுள்ள பசுமலைச் சாரலிற் றவம்புரியுங் காலக்கியனென்னு முனிவரைச் சோபனுங்கியென்னு மனைவியோடு சென்றுகண்டு அஞ்சலித்துப் பிரணமணரைக் கொண்டு பற்பல பரிகாரங்கள் செய்தும் புத்திர ருண்டாகாமையால் உம்மிடம் வந்தோம் முக்காலமு முணர்ந்த முனிவரே புத்திரரில்லாமைக்குக் காரணமாகிய பழவினை யாது யோசித்துப் புகலவேண்டுமென் றரசன் கூற அம்முனிவர் சற்றுநேரம் நிட்டையிலிருந்து மன்னனைப் பார்த்துக் கூறுகின்றார்.

அரசனே நீ யொருகாலத்தில் வேட்டைக்குப் படைகளோடு சென்று வனத்தைத வளையும்போது ஒரு நாயானது அவ்வனத்திற் றவமியற்றும் கபிலமா முனிவருடைய காலில் கடிக்க அவர் கோபித்து இதற்குரியவன் ஆயிரம் மனைவியை யடைந்தாலும் புத்திரரில்லாமல் வருந்தக் கடவனென்று சபித்தார். ஆதலால் நினக்கு மகவில்லை என அரசன் வருந்திப்

புத்திரரில்லார்க்குச் சுவர்க்கமில்லை யென்கிறார்களே என்று கேட்க அம்முனிவர் அரசனே சுவர்ணத்தின லொரு புத்திரனைச் செய்துவைத்துக் கொண்டால் சுவர்க்க முதலியவை கிடைக்குமென்று முனிவர்கூற அரசன் அவரிடம் விடைபெற்று மனைவியுந் தானும் மதுரையையடைந்து சுவர்ணத்தினுற் புத்திரப் பது மையொன்று செய்துவைத்துக்கொண் டிருந்தான் இப்படி யிருக்கையில் மிகுந்த செல்வம் பெற்ற அர விந்தனென்னும் வணிகன்வந்து அரசனைக்கண்டு கீழ் கடற்கரைக்கு வர்த்தகஞ் செய்யத்தான் சென்றதும் மீன்மூட்டைகொண்டு திரும்பியதும் பொழுதுபோன சமயத்தில் கானப்பேரூரில் வந்து தங்கியதும் காளீ சர் சித்தசாமியாய் வந்து மீன்களை யெல்லாம் உருத் திராக்ஷமாக்கியதும் தராக்குக் கற்களையெல்லாம் தங் கக்கட்டிகளாக்கியதும் கூற வேந்தனவன் அடங் காமகிழ்ச்சிகூர்ந்து காய்ந்த மீன்களை உருத்திர கணங் களாகவும் கற்களைத் தங்கமாகவுஞ் செய்தவள்ளல் எனது பொற்பாவையையும் புத்திரனுக்குவாரென்று துணிந்து வணிகன் சொல்லியவழியே சோபனங்கி யுடன் பொன்மகவைக் கைக்கொண்டு சோதிவனத் தையடைந்து, உலர்ந்த மீன்களை உருத்திர கணங்க ளாக்கச் சிவபெருமான் சடையினின்று விடுத்த கங் கையாகிய உருத்திர தீர்த்தமானது ஆடினாலும் பரி சித்தாலும் அன்போடு நினைத்தாலும் பாவங்களை யெல்லா நசிக்கச்செய்யும் அதில் மூழ்கும் விருப்ப

மூடையவராய் மூன்றடி வைத்தாலும் பர்வத்தைப் போக்கும் அத்தன்மையுள்ள தடாகத்தைக் கண்டு அன்போடு அடைந்து அதில் விதிப்படி மூழ்கித் தன்கையி லிருக்கின்ற சுவர்ணப்பதுமையை மூன்று தரம் நீராட்ட நினைத்து இருமுறை யாட்டியவுடன் சுவர்ணப்பதுமை கையைவிடு கையைவிடு என்று கூற அத்தாய்தந்தைய ரிருவரும் பெற்றபிள்ளையினும் சிறந்ததென மிகுந்த விருப்பத்தோடு எடுத்து நான் குவயசுப் பிள்ளையாயிருக்க அக்குழந்தையை உச்சி முகந்து மார்போடணைத்து முத்தமிட்டுச் சோப னுங்கி கையிற் கொடுத்தான். அவளும் மனமகிழ்ந்து மார்போ டணைத்துக் கொண்டவுடன் அவள் தன ங்களிற் பாலூற அம்பாலை யூட்டி, என தரும்பொரு ளே என்று வாழ்த்தி மகிழ்ந்தாள்.

அவ்வரசன் அப்புத்திரனுக்குச் சுவர்ணபுத்திர னென்று பெயரிட்டு இத்தலத்தில் இன்னும் அற் புதங்கள் யாதேனு மிருக்கும் பார்ப்போமென்று ஆராயும்போது அவ்வுருத்திரதீர்த்தத்திற்கு நிருதித் திசையிற் ஒரு மந்தார வனத்தைக்கண்டு அவ்விடத் தில் தண்ணீர்க்குடங்கொண்டு சென்ற ஒரு வேடன் இவ்விடத்து முனிவர் பூசித்த இரண்டு இலிங்கங்க ளுண்டென்று கூற அவ்விடத்திற் காளீசர் சோமே சனென்னு மிரண்டு இலிங்கங்களையும் மனோன்மணி சுவர்ண வல்லியையும் கண்டு மகிழ்ந்து இகத்திலன் பர்களுக்கு நான்கு புருடார்த்தங்களையும் அனுக்கிர

இப்பவமோ புத்திரரில்லாத் துன்பத்தை மாற்றியவமோ என்று பற்பலவாத் துதிசெய்ய அருட்கடலாகிய சிவபெருமான் அசரீரியாய்த் தோன்றி அரசனே நின்றுதியை மகிழ்ந்தோம் இத்தலம் உத்தம தலங்க ளெல்லாவற்றினும் பெரிது இதுவே தட்சிண கைலா யம் இதில் தூலமாயும் சூக்குமமாயும் விளங்கி அன் பருளப் பண்பையுணர்ந் தருள்வோம். ஆதலா லிவ் விடத்தில் ஓராலயம் புரிகவென்று கூறக்கேட்ட அர சன் ஆநந்தவெள்ளத்தி லாழ்ந்து பற்பல சிற்பிகளை வரவழைத்துக் கோடிசூரிய ருதித்தாற்போல விமா னங்களும் பற்பல நவரத்தின மண்டபங்களும் ஆயி ரக்கால்மண்டபமும் கோபுரமும் செம்பொன்னூற் செய்து திருமதிலும் அகழும் அதன் பக்கத்தில் நந்தனவனங்களும் உண்டாக்கி அரங்கங்களுஞ் செய் துமுடித்து அவ்வனத்தை ஒருயோசனை தூரம்ட் டும் அழித்து பற்பல குலத்தார்களுக்கும் தெருக் களும் வீதிகளு மமைத்து ஆவணத்தெருக்களும் வித்தியாசாலைகளும் அன்னசத்திரங்களு மமைத்து நல்ல நகரமாக்கினன்.                  ௭

ஆதிசைவர்களையும் ஆகம பண்டிதர்களையும் வேதி யர்களையும் வரவழைத்து அவர்களுக்கு வேண்டிய பொருளுதவிசெய்து நித்தியபூசை முதலியனவும் தப்பாமற் செய்வித்தான். சுவர்ணவல்லி காளீசருக் கும் சோமேசர் சுந்தராம்பிகைக்கும் வைகாசிவிசா கத்திலும் தைப்பூசத்திலும் திருவிழாக்க ளியற்றி

மதுராபுரிக்குச்சென்று சோமசுந்தரரையும் மீனாட்சியையும் நாடோறுந் தொழுதுவருவதே விரதமாகக் கொண்டு போய்த் தரிசித்து வருகையில் ஒருநாள் மழையினாற் சிரமப்பட்டு அர்த்தசாம தரிசனஞ் செய்கையில் பரமசிவன் பிரசன்னமாய்த் தோன்றி நின் சேவையை யுவந்தோம் இன்றுதொட்டு நீ இங்கு வந்து வருந்தவேண்டியதில்லை காளிபுரத்தில் சுவர்ணவல்லி காளீசருக்கு மத்தியிலே மீனாட்சியும் நாமும் வந்திருப்போம் அவ்விடத்து நம்மைப் பணியலாமென்று அநுக்கிரகிக்கப் பாண்டியன் விடியுமுன் காளிபுரத்தை யடைந்து பார்க்கையில் இடத்தின் அடிச்சுவ டிருக்கக்கண்டு மகிழ்ந்து அங்குள்ளவரனைவர்க்கும் எடுத்தோதி மீனாட்சி சுந்தரேசராலயப் பிரதிஷ்டையுஞ்செய்து சிவபெருமான் கழலிணைகளைக் கனவினு மறவாது பல்லாண் டரசாண்டு சுவர்ணபுத்திரனுக்கு முடிசூட்டிக் காளீசரநுக்கிரகத்தினாற் கைலாயத்தை யடைந்தான்.

வீரசேனபாண்டியப்படல முற்றிற்று.

---

## கூ-வது வரகுணபாண்டியப்படலம்.

வீரசேனபாண்டியன் சரித்திரத்தை மொழிந்தோம். இனி வரகுணபாண்டியன் சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

சுவர்ணபுத்திரனானவன் காளீசனைத் தியானிக்கு மனத்தொடு தன்னுயிர்போல மன்னுயிர்களையுந் தாங்கி ஆறிலொரு கடமை வாங்கிக் குடிகளையெல்லாம் விரோதமில்லாமற் காப்பவனாய் அரசாண்டு காளீசருடைய ஆலயத்தைப் புதுப்பித்துத் திருவிழா முதலியவுங் குறைவற நடத்தி அழகினாலும் உத்தம குணங்களாலும் வரகுணபாண்டியனென்று பெயர் பெற்று வாழுநாளில் சோழநாட்டை யரசாளும் வீர சோழனுடைய புத்திரனான சோணக்கன் என்பவன் உலகமெங்கும் வெற்றிபெற்றுத் தனது இராஜதானியைவிட்டுத் திருவானைக்காவை யடைந்து அகிலாண்ட நாயகியுடைய அருளைப்பெற்று விக்கிரமசோழனென்னும் பெயரும்பெற்று உலகத்தில் எல்லா அரசர்களையும் வென்றோம் இனிவரகுணபாண்டியனையும் வெல்வோமென்று மதுரையடைந்து அங்கிருந்து காளிபுரத்துக்கு இரண்டு யோசனையி லிருக்கிற சோழபுரத்தை யடைந்தான். அச்சோழன் வந்திறங்கிய படியாற் சோழபுரமென்று பெயர்பெற்ற அந்நகரிலுள்ள மறையவர்கள் பாரதிதீர்த்த மகிமையையும் சிவலிங்க மகிமையையும் கூற அத்தீர்த்தத்தில் அவ்வரசன் மூழ்கிப் பரமசிவனைப்பூசித்துக் காளீச ரருள் பெற்ற வரகுணபாண்டியனை நாம் வெல்லக்கூடுமோ வென்று ஆலோசிக்கையில் அவ னமைச்சர்கள் தொழுது மன்னனே மன்னரனைவரையும் வென்று பகைக் கடலைக்கடந்த உனக்கு ஒரு குளப்படிபோன்ற வர

குணனை வெல்வதரிதோ வென்றார்கள். உடனே கா ளிபுரத்துக்கு யுத்தத்திற்குப் புறப்படுங்க ளென்று அரசனேவச் சதுரங்க சேனையு மெழுந்தன தானும் யுத்தசன்னத்தனாய்ப் புறப்படும் பொழுது கொடி முறிந்து விழுந்தது குதிரைகள் கண்ணீர் விட்டன இத்தீச் சகுனங்களைச் சோழன்கண்டும் மதியாது சென்று தன் சேனைகள் தங்குவதற்கு வாட்கோட்டை யொன்று புரிந்து அதிலிருந்து கொண்டு இரண்டுபே ரிகை முழக்குவித்தான்.

அப்பேரிகை முழக்கத்தை வரகுணனறிந்து ஒற்றர் களைப்பார்த்து யாரென்று வினவ விக்கிரம சோழன் எதிர்த்துவந்த வரலாற்றைக் கூற அரசன்கேட்டு விக் கிரமசோழனோ வெற்றிவேந்தன் அவன் சேனையோ டெதிர்க்கச் சேனைகளுமில்லை பொருளுமில்லை நமக் குப் பொருளும் ஏவலும் பூமியும் ஒப்பற்ற காளீச ரன்றி வேறில்லை யென்று நினைத்துக் காளீசர் சந்நிதி யடைந்து பணிந்து போற்றி விக்ரமசோழனென்ப வன் முன்னர்களை யெல்லாஞ் சேதித்து என்னையு மெ திர்க்கப் படைகளோடு வந்திருக்கின்றான். அவனோடு எதிர்க்கப் படையுமில்லை சத்தியுமில்லை நீயே யல் லாமல் வேறு கதியில்லை என்னை இரட்சித்தருள வேண்டுமென்று பணிந்தான் அப்போது காளீசர் ஆகாயத்தினின்று அரசனே யுன்பகையை வெல் வோம் நீ யுத்தஞ்செய்யப் போவென்று கூறியருள அந்த ஆகாயவாக்கானது தன்செவிப் பட்டவுடன்

உள்மகிழ்ந்து தன் சேனைகள்சூழப் போர்க்கெழுந் தான் காளீசர் பத்திரகாளியை யழைத்து நம்முடை ய வரகுணனைச் சோழராசன் எதிர்த்தான் அவன் பராக்கிரமத்தால் உலகெலாம் வென்றவ னுதலால் நமது வரகுணனோடு நீயுஞ்சென்று வெற்றிகொண்டு வா வென்றனுப்பப் பத்திரகாளியும் பூதகணங்களை யழைத்து நீங்கள் வரகுணன் படையோடு போர்வீரர் களாய்ச்சென்று சோழராசனுடைய சேனையை அழிப் பீர்களென் றேவித்தானும் மாயையினற் பயங்கரவுரு வங்கொண்டு வாட்கோட்டையிலேறி மெல்லமிதித்த மாத்திரத்தில் வாட்கோட்டை தூட்கோட்டை யா யிற்று. உடன் பகைவன்சேனையிற் பாய்ந்து கை களினலும் கால்களினலும் அடித்து மடித்தாள்.

சோழனனவன் தனது சேனைகளெல்லாம் அழிந் ததுகண்டு வில்லைவளைத்துக் குணத்தொனி செய்து பாண்டியனோடெதிர்க்கப் பாண்டியனும் தன் வில் லைவளைத்து நாணேறிட்டுச் சோழனெய்த பாணங் களை விலக்கி அவன் தேர்ச்சாரதியையும் குதிரை களையும் வில்லையும் பாணங்களாற் றுணித்தான். உட னே சோழனனவன் மற்போர்புரிய வருகையில் ஒரு சர்ப்பத்தின்மேற் கருடன் பாய்ந்தாற்போல் அவன் மேற்பாய்ந்து அவனை வென்று அவனைத்தனது தேரிற் கட்டி அட்டகாசஞ் செய்தான். சேனைவீரர்கள் செய, பேரிகை முழக்கினர்கள். காளீசருடைய அநுக்கிர கத்தால் வரகுணபாண்டியன் காளிபுரத்தை யடை

ந்து சோழனைச் சிறைச்சாலையில்வைத்துவிட்டுச்சிவ பெருமானுக்குப் பற்பல திருவிழாக்களையும் நடத்திக் கொண்டு வாழ்ந்திருந்தான். விக்கிரமசோழன் செய்த வாட்கோட்டை மேல் நடந்த காரணத்தால் அன்று முதற் பத்திரகாளிக்கு வாள்மேல்நடந்த அம்மையெ ன்று பெயராயிற்று.

வரகுணபாண்டியப்படல முற்றிற்று.

---

## ௩௪-வது சுகந்தகேசிப் படலம்.

வரகுணபாண்டியன் சரித்திரத்தை மொழிந்தோ ம் இனிச் சுகந்தகேசி சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே யென்று சூத புராணிகர் சொல்லத் தொடங்கினார்.

சிறைச்சாலையிலிருக்கிற விக்கிரமசோழனைவன் தன் மனத்தி லாலோசித்துக்கொண்டு வரகுணனி டம் ஒருதூதனை யனுப்ப அவனும் வரகுணபாண்டிய னிடம்வந்து பணிந்து காளீசருடைய மான்மியமும் காளிபுரத்தின் மான்மியமும் உன்னுடைய கீர்த்தியும் சோமசுந்தரக்கடவுள் மீனாட்சியோடு வந்ததும் கேள் விப்பட்டு உன்னைக் கண்டுகொள்ளக் கருதி வந்ததே யன்றிப் போர்க்குவந்தேனல்லேன் என்னால் வெல்லப் பட்டமன்னவ ரனைவரையும் உன்னிடம் விட்டுவிடுகி றேன் என்செல்வங்க ளனைத்தையும் நீயே பெற்றுக் கொள் அன்றியும் யான் வரத்தினாற் பெற்ற சுகந்த

கேசி என்னும் அழகு மிகுந்த பெண்ணையு முனக்கென்று நிச்சயித்தேன் அவளையும் விவாகஞ்செய்து கொண்டருள்வா யென்று பிரார்த்திக்கின்றே னென்று கூற வரகுணன் அத்தூதனை யனுப்பிவிட்டுத் தன்மனத்தி லாராய்ந்து சோழனைச் சிறைநீக்கிக் கொண்டு வரும்படிக் கட்டளையிட்டு அவனோடு அன்பாய் வசனித்து உமது புத்திரியைக் காண விரும்புகின்றே னென்றான்.

உடன் சோழராசனானவன் மகிழ்ச்சியோடு புத்திரியை வரவழைக்க அப்பெண்ணை வரகுணபாண்டியன் கண்டு அவளழகைநோக்கி யதிசயிக்கையில் சோழன் உமையை நிகர்த்த அழகுள்ள இப்பெண்ணை மணஞ்செய்துகொண்டு வாழக்கடவா யென்றான். உடனே நகரமெல்லா மலங்கரித்துப் பற்பல வாத்தியங்களுடன் பிராமணர்கள் பற்பலர் சூழச் சுகந்தகேசியை அலங்கரித்துச் சோழன் மடிமேல் வைத்துக்கொண்டு அவள்கரத்தை வரகுணன்கரத்தில் வைத்துத் தாரை வார்த்தான். வரகுணனும் மகிழ்ச்சியுட னேற்றுக் கொண்டான். மறையவர்கள் ஆசீர்வாதஞ்செய்யவும் மங்களம் பாடவும் இருவரும் மணவறை புகுந்தார்கள் பாண்டியனானவன் மன்மதனுக் கொப்பாகச் சயனத்தின்மேலிருக்கச் சுகந்தகேசி ஓர் வல்லிக்கொடிபோல் நின்றாள்.

அப்போது வரகுணபாண்டியனானவன் சுகந்தகேசியைப் பார்த்து இவள் சரசுவதியுமன்று, இலக்குமி

யுமன்று, நீரரமகளுமன்று உலகெலாமீன்ற மலைமக ளேயிவளென்று மனத்தில் நிதானித்துச் சுகந்தகேசி யைப்பார்த்துப் பெண்ணே உன்னுடைய வடிவத்தை யுங் குணத்தையும் பார்த்தால் தெய்வப்பெண்ணைப் போலத் தோன்றுகின்றாய் அன்றியும் உனது கூந்த லில் இயற்கைமணங் கமழ்வதினால் சுகந்தகேசியென் னும் பேர்பெற்றாய் ஆதலால் உனக்குக் கணவன்யா னன்று காளீசனே யுனது கணவனாதல்வேண்டும். அ வனுடனின்புற்று வாழ்வாயென்று வரகுணன் கூறச் சுகந்தகேசியும் தலையைக் குனிந்துகொண்டு சொல்லு கின்றாள்.

எளியளாகிய என்னுடைய மனத்தைச் சோதிக் கும்பொருட்டு என்ன பரிகாசஞ் செய்கின்றீர் உம் மை நாயகனென்றடைந்த என்னை மற்றொருவரிடத் திற் செல்லச் சொல்வது நீதியோ வேறொருவரை மனத்தினாலும் நினைப்பேனோவென்றாள். அரசன் கேட்டுப் பெண்ணே என்னிடத்தில் நீவைத்த வாஞ் சையைவிட்டுக் காளீசனையே நாதனாக நினைவாயெ ன்று கூறச் சுகந்தகேசி கேட்டு நான் சோழராசன் புத்திரியல்லவோ அரசர்க்கரசனாலும் தேவர்கட் குத் தேவனாலும் அவரை நோக்கேன் நின்னையன் றிக் கணவர் வேறில்லையென வரகுணன் கேட்டுப் பெண்ணே உலகங்களெல்லாஞ் சிவபெருமானுடை யது. அவருக்குத் தோழன் குபேரன்; பொன்மலை வில்; திருமாலும், பிரமாவும் அவரடியார்கள். அவு

ரிடத்தில் என்ன குறைவுள்ளது என்றவுடன் சுகந்த கேசி கேட்டு அக்கினிசாட்சியாக என்னை விவாகஞ் செய்துகொண்ட நீர் வேறொருரிடத்திற் செல்லென் பது தக்கதன்றென்று வலிந்துகூற அரசன் சற்றுநே ரம் யோசித்துக் கூறுகின்றான் நாமிருவருஞ்சென்று காளீசனைத் தரிசிப்போமென்று சுகந்தகேசியுட னெ ழுந்து கோயிற்குச் செல்லுமுன் பூசகர்கள் அர்த்த சாம பூசைமுடித்து ஐந்து கதவுகளையும் பூட்டிக்கொ ண்டு சென்றார்கள். அரசன் சுகந்தகேசியுடன் கோ யில் வாயிலில் நின்றுகொண்டு மனத்தில் ஆலோசித் துக் காளீசரோ முற்காலத்தில் பாண்டியனுடைய பொ ற்பாவைக்கு உயிரளித்தது உண்மையானால் இக்கவா டந் திறக்கக்கடவதென்று கூற அக்கதவு திறந்தது. இரண்டாம் வாயிலிற்சென்று என்னோ டெதிர்த்த சோழனை நீரோ வென்றது உண்மையானு லிக்கவா டந் திறக்கக்கடவதென்று கூற அக்கதவுந் திறந்தது. மூன்றாம் வாயிலிற்சென்று நீரோ இவ்வுலக மனைத் தையுங் காப்ப துண்மையானு லிக்கவாடந் திறக்கக் கடவதென்று கூற அக்கதவுந் திறந்தது. நான்காம் வாயிலிற்சென்று இச்சுகந்தகேசியைப் பார்ப்பதி என்று யானினைத்த துண்மையானு லிக்கவாடந் திற க்கக் கடவதென்று கூற அக்கதவுந் திறந்தது. ஐந் தாம் வாயிலிற்சென்று இச்சுகந்தகேசிக்கு நீரோ தலை வரென்று நான் சொல்லிய துண்மையானு லிக்கவா டந் திறக்கக் கடவதென்று கூற அக்கதவுந் திறக்கக்

காளீசனைக் கண்டான் உடனே பணிந்து சுகந்தகேசி யைப் பார்த்து உன்கணவ னிவனே இவனைக்கூடி இன்புறுவாய் என்று பன்முறை கூறவும் சுகந்தகேசி மறுத்து நீயே யென்கணவனென்றாள். அப்பொ ழுது வரகுணன் சினந்து உடைவாளைக் கையிலெ டுத்தான். அப்பொழுது சிவபெருமா னிளநகை யோடு தோன்றி அரசனே நீ முன்னமே விவாகஞ் செய்துகொண்ட இப்பெண்ணை என்னிடங் கொண் டுவந்த தென்னவென்று கேட்க உம்மை யுத்தேசித் தே விவாகஞ் செய்தேனென்றான். சிவபெருமான் அரசனே நீயே இவளை யன்போடு கைப்பிடித்தவ னாதலால் அழைத்துக்கொண்டு போவென்று கூற அரசன் என்னுடைய உடல் பொருள் ஆவி மூன்றும் உன்னுடைமையே யாதலின் இவளை நீயே கைக் கொண்டருள் மறுத்தால் எனதுயிரை மாய்த்துக் கொள்வேனென்று உடைவாளைக் கழுத்திற் பூட்டிக் கொள்ளக் காளீசர் உடன் தமது கைகளை நீட்டிச் சுகந்த கேசியைத் தழுவிக்கொண்டு இலிங்கத்துட் புகுந்தருளினர்.

சுகந்தகேசி இலிங்கத்துட் கலந்தமை யுணர அவள் கையின் கங்கணமும் காற்சதங்கையும் அவ்விலிங்கத் தின் வாமபாகத்திற் காணப்பட்டன. அவளுடைய கூந்தலின் சுகந்தம் அவ்வனமுழுமையும் பரிமளித் ததா லவ்வனத்திற்குச் சுகந்தவனமென்று பெயரா யிற்று. என்று சுமந்து முனிவர் கூற அரசன் கேட்டு

ச் சுகந்தகேசியை மணம்புரிந்த பாண்டியன் இவளைப் பார்ப்பதியென்று எப்படி யுணர்ந்தான். சிவபெருமான் அவளை இலிங்கத்துட் கொண்ட தென்னவென்று கேட்கச் சுமந்து முனிவர் கூறுகின்றார்.

முற்காலத்தில் சனகாதிமுனிவர் நால்வரும் கைலாயத்தை யடைந்து பரமசிவனைப் பணிந்து நின்று யோகத்தின் றன்மையை எங்கட் குரைத்தருள வேண்டுமெனக் கூறப் பரமசிவனும் அன்போடுணர்த்த முனிவர்களு மஃதுணர்ந்துகொண்டு விடைபெற்ற பின் உமாதேவி பரமசிவனைப் பணிந்து அந்த யோக நூலை எனக்கும் அருளவேண்டுமென்றாள். சிவபெருமான் கோபித்து என்னிடத்தில் நீங்காமலிருந்து கேட்டுக்கொண் டிருந்தும் நீ அதை யுணராமல் மறுபடியும் கேட்டமையால் மானிடப் பெண்ணாகக் கடவாயென்று சபித்தார். உடனே அம்பிகை புத்தியில்லாதவளான எனது பிழையைப் பொறுப்பாயென்று வேண்டச் சிவபெருமான் மகிழ்ந்து நீ உலகத்திற் சோளதேசத்தரசனிடத்திற் பிறந்து பன்னிரண்டு வயதில் தக்கண காளிபுரத்திற்கு வருவாய் நாம் அத்தலத்தில் அப்போது உன்னைச் சேர்த்துக்கொள்வோமென்று விடைகொடுத் தருளினர். அக்காலத்தில் பூவுலகத்தில் விக்கிரமசோழன் புத்திர னில்லாமையால் புத்திர காமேட்டியாகஞ் செய்ய அந்தயாகாக்கினியில் அப்பார்ப்பதியானவள் ஒரு குழந்தையாய்த் தோன்றினள். அச்சோழன் அக்குழந்தையின் அழ

கைப்பார்த்து உலகெலா மீன்ற வுமையவளே எனக்குப் பெண்ணுனென்று மகிழ்ந்து தன்மனைவி கரத்திற்கொடுக்க அவளும் மகிழ்ச்சியோடு வாங்கி வளர்க்குங்காலையில் அக்குழந்தையின் கூந்தல் இயற்கை மணங்கமழ்வதை யுணர்ந்து சுகந்தகேசியென்று பெயரிட்டனர் அப்பெண்ணரசி வளருங் காலையில் பற்பல அரசர்கள் இவளை விரும்பி விவாகஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று வசனித்தார்கள் அவ்வரசன் தன்பெண்ணை மடிமேல் வைத்துக்கொண்டு இவ்வரசர்களில் நீ யாரை யுத்தேசிக்கிறுயோ அவருக்குக் கொடுக்கிறேன் உன்னினை வென்னெனக் கேட்க ஒன்றுங் கூருது. வெட்கி நின்ருள். மீட்டும் அரசன் பல்காற் கேட்க நின்னை யெவன் வெல்கின்ருனே அவனே என் விவாகத்திற் குரியனென்று கூற அவ்வரசன் கேட்டுப் பற்பல அரசனையும் வென்று பாண்டிநாட்டை வெல்லக் கருதிவந்து வரகுணனேடு எதிர்த்தான் காளீசரே யவனை வென்றருளினர். அச்சோழன் அப்பாண்டியனுக்கு அப்பெண்ணைக் கொடுக்க அவன் காளீசரிடஞ் சேர்ப்பித்தானென்று சுமந்து முனிவர் விடைகூறினர்.

சுகந்தகேசிப்படல முற்றிற்று.

---

## கரு-வது. விக்கிரமசோழன் சிவலிங்கப் பிரதிட்டைப்படலம்.

சுகந்தகேசி சரித்திரத்தை மொழிந்தோம். இனி விக்கிரமசோழன் சிவலிங்கப் பிரதிட்டைசெய்தசரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

சூரியனானவன் தமது குலத்திற் பிறந்த சுகந்தகேசியைக் காளீசர் இலிங்கத்துள் ஐக்கியஞ் செய்துகொண்டாராம். இதென்ன ஆச்சரியமென்று காணவருபவன் போல உதயாசலத்தில் உதயமானன். வரகுணபாண்டியனானவன் அதிகாலையிலெழுந்து நித்தியகரும முடித்துக்கொண்டு மந்திரிகளுடன் சபையிலிருந்தான், விக்கிரமசோழன் மனைவிமுதலியவர்கள் சுகந்தகேசியைக்காணுமல் சோழராசனிடத்தி லறிவித்தார்கள். சோழன் கேட்டு மனங்கலங்கி யுடல்பதறி வரகுணனைப்பார்த்து இனியமொழியாய் எனது புத்திரி எங்கிருக்கின்ற ளென்றான். அருந்தவருங் காண்டற்கரிய காளீசலிங்கத்திற் புகுந்து சுகித்திருக்கின்ற ளென்றான். சோழனதிசயித்து மூக்கின்மேல் விரலைவைத்து அவ்வதிசயத்தைப்பார்க்க வேகமா யெழுந்தான். வரகுணனும் அமைச்சர்களோடும் அரண்மனையிலுள்ள மாதர்களோடும் கோயிலுக்குச்செல்லப் பூசகர்களும் காளீசர் சன்னிதிக்கு வந்தார்கள். கதவைத்திறக்க

மன்னர்களும் சென்று காளீசலிங்கத்தைத் தரிசித்து திருபாகத்திற் கங்கணமும் காற்சதங்கையும் விளங்கக் கண்டார்கள்.

கண்டு அதிசயித்து கண்களில் ஆநந்தக்கண்ணீர் பெருக எனது கண்மணியை நிகர்த்த குமாரத்தியை வரகுண பாண்டியனுக்கு அக்கினிசாட்சியாய்ப் பாணிக்கிரகணம் பண்ணிக் கொடுத்தேன் அவள் கைவளையும் காற்சதங்கையும் கண்ணுடிக்குட் டோன்றுவது போல இவ்விலிங்கத்துட் டோன்றக் கண்டேன், என்ன ஆச்சரியம் இப்பாண்டியனே காளீசனும் என்று யாவருங் கேட்கச்சொல்லி நின்றான். இத்தருணத்தில் சடைமுடியும் விபூதி ருத்திராட்சமுந்தரித்து ஒரு வயோதிக பிராமணன் வந்து காளீசனைப் பணிந்து கைவளையுஞ் சதங்கையு நோக்கி யதிசயித்துச் சிவபெருமான் சந்நிதியினின்று ஆடிப்பாடித் துதித்துக் குதுகலிக்க அம்மறையோனை வரகுண பாண்டியன் கண்டு பணிந்து நீர் யார் சொல்லவேண்டுமென்று கேட்க வேதியன் சொல்லுகின்றான் காஞ்சி நகரத்தில் வசிக்கின்ற சங்கரமுனிவர் புத்திரன் என் பெயர் சிவகற்பன் பூதி சாதனத்தையுடைய சைவ நெறியை உறுதியாய்ப் பிடித்துச் சிவராத்திரியில் ஏகாம்பரேச்சுரரைச் சிந்தித்தேன். பரமசிவன் ஆகாயத்தில் அசரீரியாய் நின்று பூலோகத்தில் யாம் வசிக்கும் புண்ணியதலங்களிற் சிறந்தன மதுரை காளிபுரம் என்று இரண்டு அவற்றுள் காளிபுரம் நமக்கு

அன்பனுகிய வரகுணனுக்குத் தோற்ற சோழன் மகிழ்ந்து கொடுத்த சுகந்தகேசியை நம்முடைய சிவலிங்கத்துட் டோன்றும் அடையாளத்தோடு சேர்த்துக்கொண்டோம். அவ்விலிங்கத்தைப் பௌரணையிற் காண்பவருக்கு அவளணிந்தவளையுஞ் சதங்கையும் பிரத்தியட்சமாய்த் தோன்றும். அவ்விலிங்கத்தை யன்போடு பணிந்தாற் சாயுச்சியமும் பெரும்புகழும் பெறுவார்கள் முத்தியை விரும்புவாயாயிற் காளிபுரஞ் சென்று பத்தியோடு தரிசிப்பாயென்முர். அப்படியே யானும்வந்து தரிசித்தேன். இப்பொழுதே சாயுச்சியம் பெறுவேன் இதற்குச் சந்தேகமில்லையென்முன்.

அப்பொழுது காளலிங்கத்தி லொரு ஒளியுண்டாயிற்று, அவ்வொளிக்குள் அந்தப்பிராமணன் மறைய அங்குள்ள பலருங்கண்டு ஆநந்தக்கடலின் மூழ்கச் சோழனுங் துன்பநீங்கிக் காளீசனைத் துதித்துச் சிவபெருமானே அரியதவத்தாற்பெற்ற சுகந்த கேசியையும் உமக்கே கொடுத்தேன். உம்முடைய பெருங் கருணையினுற் சிறியேனுக்கு குலம் விளங்கும்படி புத்திரனை யருளவேண்டுமென்று துதிக்கும்போது சிவபெருமான் அசரீரியாய்நின்று அரசனே இவ்விடத்துள்ள ஒரு கனியைக்கொண்டுபோய் உன் மனைவியை யுண்பி யுனக்கு ஒரு புத்திரன் உண்டாவான் என்று கூற உடனே ஒரு கனி அமுதம்போல் எதிரிலிருக்கக்கண்டு அதையெடுத்துத் தன் மனைவிகையிற்

கொடுக்க அவனுண்டு கருப்பமுற்று ஒருபுத்திரனைப் பெற அவ்விக்கிரமசோழன் மகிழ்ந்து தாளவன மென்று பெயர்பெற்ற நாட்டரசன் கோட்டைநகரில் கண்ணுடையநாயகி வீற்றிருந்தருளும் ஆலயத்தின் றென்பாகத்தில் தன்பெயரால் ஓரிலிங்கந் தாபித்து அபிடேக நைவேத்தியமுஞ் செய்து துதித்துப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு திருவானைக்காநகரஞ் சேர்ந்து வாழ்ந்திருந்தான்.

விக்கிரமசோழன் இலிங்கப்பிரதிட்டைப் படல முற்றிற்று.

---

## ௯௯-வது. புட்கரப்படலம்.

விக்கிரமசோழன் சிவலிங்கப் பிரதிட்டை செய்த சரித்திரத்தை மொழிந்தோம். இனிப் புட்கரன் சரித்திரத்தைக் கூறுகின்றோம், கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

புண்ணிய நதியாகிய கோதாவரிதீரத்திலுள்ள கரவீரமென்னும் நகரத்தில் அந்தணர்குலத்திற் பிறந்தவனும் கொலை, வஞ்சகம், பொய், விசுவாசகாதம், கட்குடி என்னும் மகாபாதகங்களைச் செய்பவனும் நீசமாதரைப் புணர்வோனும் நிலைமையற்றவர்களையும் வழிச்செல்வோரையும் அலைத்துப் பொருளைக்கவர்வோனும் பிறர்பொருளைக்கவர்வோனும் நல்லோர்களைப்பயமுறுத்தி யவர்கள் பொருள்களைக் கிரகிப்பவ

னும் மாதர்களைக் கறுவிக் கற்பழிப்போனும மாய வித்தைகள் கற்றவனும் வாகடங்கற்றவனும் பற்பல ஔடதங்கொடுத்து நோயாளிகளைக் கொல்பவனும் தாயுந்தாரமுஞ் சமமென நினைப்பவனும் வன்சொல் லினால் வலியாரை மயக்குபவனும் இன்சொலால் எளி யாரையும் ஏய்ப்பவனும் நல்ல தருமநெறியிற் செல் கின்ற பரிசுத்தன்போற்காட்டி மோசஞ் செய்யும் குணமுடையவனுமாய்ப் புட்கரனென் றொருவன் இருந்தான். அப்போது கம்பாநதி தீரத்திலிருக்கும் ஒரு பிராமணன். கருமாநுட்டானமே துணையாகக் கொண்டவன் கருமசீலனென்னும் பெயருள்ளவனி ருந்தான். அவன் மனைவியாகிய சுபாஷணியோடு தீர்த்த யாத்திரைக்காகப் புறப்பட்டு பற்பல புண்ணி யதீர்த்தங்களில் மூழ்கிக் கோதாவிரிக்குச் சென்று கரவீரநகரத்தை யடையப் புட்கரன் அவர்களைக் கண்டு வணங்கி எந்தவூரென்று கேட்டான். வேதியர் ஊரும் பேருமுரைக்க அவன் மனைவியின் தனங்க ளையுங் கூந்தலையுங்கண்டு ஆசையை மனத்துட்கொ ண்டு எவ்விதமாவது இவளை இணைக்கி வசமாக்குவோ மெனவெண்ணி ஐயா இவ்வளவுதூரம் நடந்திளைத் தீர்களே உங்களூர்த்தேசம் என்னவென்று கேட்கக் கரு மசீலன் கங்கையின் மூழ்கிச் சன்மசாபல்லியம் பெறற் கெண்ணி என்மனைவியோடும் வந்தேன் நின்பெய ரென்னெனப் புட்கரனுந்தன் பெயரைச்சாற்றி உங் களை நிகர்த்த பெரியோர்களைக்கண்டு அவர்களிடத்

திற் கல்விகற்கவும் எனதுகைப்பொருள் யாவும் அவர் கட்களிக்கவும் எண்ணியிருக்கின்றேன் எனது நல்வி ளைப்பயனு லிங்குவந்தீர்களே யானும் எனதுபொருள் களும் உங்களுடைமையே இச்சித்ததெல்லாம் உங்க ளுக்களிக்கின்றேன் என்று உபசரிக்க அப்புட்கரனு டைய கிரகத்திற் சென்று தங்கியிருந்தார்.

அப்போது அப்புட்கரனுடைய வஞ்சனையை அறி யாமல் அவன் புத்திரனைப்போலப் பணிசெய்யத் தா னறிந்த நூல்களை யவனுக்குப் போதித்தான் இப்ப டிச் சிலநாட் சென்றபின் அக்கருமசீலன் மாகமா சம் பௌரணமிவர யான் கங்கையிற்சென்று மூழ்கி வருவேன் மனைவி சரீரம் மெலிந்திருப்பதினுல் இங் கிருக்கட்டுமென்று அவளை வைத்துவிட்டுச் சென் ளுன், வேதியன் சென்றவுடன் புட்கரனெனுவன் அவ் வேதியன் மனைவி மயங்கத்தக்க மருந்தளித்து அவ ளைப் புணர்ந்தான். அவளுக்கு மயக்கந் தெளிந்த வுடன் பயந்து கோபித்து அடபாவி குருபத்தினி யைக் கூடுதல் நன்றோ கெடுவாயென்று வைதாள். புட் கரனும் அவளை வணங்கிநின்று பாவமும் தருமமும் குருவுஞ் சீடனுமென்று நூல்கள் சொல்வதெல்லாம் வஞ்சமே யல்லாமல் சுகமில்லை சாத்திரங்களெல்லாம் பொய்யே மலையில் வாழுகின்ற தவமுனிவரானுலும் சுகத்தை யல்லாமல் வேறொன்றை யறிந்தவர்யார் நீயோ தருணே, வேதியனே வயோதிகன் யௌவனப் பருவத்தையுடைய என்னைப் புணர்ந்து சுகி இனி

யிருவருங் கூடி யின்புறுவோமென்று அவ்வஞ்சகன் கூறிய சொற்களால் அவளும் இணங்கினாள் இருவரும் கூடி இன்பக்கடலில் மூழ்கினார்கள். இப்படி இருக்கையில் கங்கைக்குச் சென்ற வேதியன் வந்தனன் அவனை இருவரும் மதியாமையையும் புட்கரன் வஞ்சகம்யாவையும் மனத்தி லுணர்ந்தான். கொடியனாகிய புட்கரனும் தன்மனைவியும் கள்ளுண்டு இன்பக்கடலின் மூழ்கிக் கிடக்கையைத் தன்கண்களாற் கண்டான்.

வேதியன் கண்டதை இருவரு முணர்ந்து அவ்வேதியனைக் கொன்றார்கள். உடனே அவ்விருவரையும் பழிசுற்றிக்கொள்ள மனங்கலங்கி யறிவிழந்து ஆகாவென்று வருந்தி ஊரைவிட்டு வனங்களி லோடிப் பற்பல தேயங்கடந்து முன்னைத் தவப்பேற்றினால் காளிபுரத்தை யடைந்து உருத்திரதீர்த்தத்தில் மூழ்கிக் காளீசரைத் தரிசிக்கத் தேவவிமான மிறங்கிற்று. அதிலேறிக் கைலையை யடைந்தார்கள். ஆதலால் அத்தீர்த்தம் மூழ்கினர்களுடைய பாதகங்களையெல்லாம் போக்குவது நிச்சயம் இதிலும் சிறந்த ஒரு கதையைக் கூறுவாமென்றார்.

புட்கரப்படல முற்றிற்று.

---

## கஎ-வது. பேய்கள் சாபநீங்குபடலம்.

புட்கரன் சரித்திரத்தை மொழிந்தோம் இனிப் பேய்கள் சாபநீங்கிய சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூத புராணிகர் சொல்லத் தொடங்கினார்.

நிருமதாநதி தீரத்தில் யாகின் மதி என்னும் நகரத்தில் பற்பல நூல்களையும் ஆராய்ந்து கருமவிதிகளியாவையும் விடாமற் செய்பவனாகிய கருமபந்து என்னுமொரு பிராமணனிருந்தான். அவன் மனைவி தருமசீலை என்பவள். அவர்கட்கு ஒரு புத்திரன் பிறந்தான் அவனுக்கு உபநயநாதிச் சடங்குகளெல்லாம் விதிப்படி செய்து விவாகமுஞ் செய்வித்து ஏகபுத்திரனாகையால் அப்புத்திரனுக்கு அன்போடு இடைவிடாமல் வேதாகமப் பொருளெல்லாங் கற்பித்து நல்வழியிற் செலுத்திவருங் காலையில் வஞ்சகர்களாகிய சில பாபிகளுடைய துர்ப்போதனையினால் மயங்கி வேசையர்களுடைய மயக்கவலையி லகப்பட்டுக் கள்ளுணல் திருடுதல் பொய்சொல்லல் முதலியவைகளை இரகசியமாகச் செய்து வருகையிற் றகப்பனறிந்து விசனப்பட்டுப் புத்திரனை யழைத்து அருமையாகிய நம்முடைய குலத்துக்குத் தகாத செய்கைகளை விட்டுவிடென்று பலவாறாகச் சொல்லியும் பெரியோர்களைக்கொண்டு சொல்வித்தும் புத்திரன் கேளாமையினாற் றன்பக்கடலின் மூழ்கினன். பின்பு சிலநாட்

சென்றபின்பு ஊரிலுள்ளவர்கள் இவனைத் தருமலோ
பனென்று அவ்வூரைவிட்டுத் துரத்த மற்றொரு ஊரி
ற்சென்று வேசியருடைய துணிமுதற் றிருடினான்.
அவ்வூராரும் துரத்த ஒரு பறைச்சேரியை யடைந்து
இறைச்சியுங் கள்ளுமுண்டு புலைச்சிகளையும் புணர்ந்
தான். புலையர்கள்கண்டு தர்மலோபனைப் பிடித்து
வெட்டி நெருப்பி லிட்டார்கள் உடன் அவன் பே
யாகி அவ்வனத்தில் முன்பே திரிந்துகொண் டிருக்
கிற நான்கு பேய்களோடு ஐந்தாய்க்கூடித் தன்றுன்பங்
களைச் சொல்லிக்கொண்டு இரக்கத்தோடு அழுது பல
பலவென்று கண்ணீர்விட்டுப் புலம்பிக்கொண்டு நீங்
காத துயரத்தோடு பரிதபித்து விந்தியமலையை யடு
த்தவனத்திற் றிரிந்துகொண் டிருந்தான்.

அக்காலத்தில் காளீசனைத் தரிசிக்கும்பொருட்டுக்
கவுதமமுனிவர் அவ்வழியாய்ச் செல்லுகையில் பே
ய்கள் படுந்துன்பங்களைப் பார்த்திரங்கி நீங்களியா
வர் இங்கு வருந்துவ தென்னவென்று கேட்க அப்
பைசாசங்களில் தருமலோபனாகிய பேய் நான்மாகின்
மதிநகரத்திற் பிராமணன் வயிற்றிற்பிறந்து புலைச்சி
யைப்புணர்ந்து பேயானேனென்றது. மற்றொன்று பா
ஞ்சாலதேசத்தில் அரசர்குலத்திற் பிறந்தேன் எனக்
குத் துன்மதனென்று பெயர் பிராமணருடைய பொ
ருளையெல்லா மபகரித்துப் பேயானேனென்றது, மற்
றொன்று கலிங்கதேயத்தில் தோஷசிகாமணி யென்
னும் வைசியனுக்குப் புத்திரனாய்ப்பிறந்து வேதியர்

பொருளைக்கவர்ந்து பேயானேனென்றது. மற்ற இர
ண்டும் மலையாளநாட்டில் சூத்திர சகோதரியோடும்
பிராமணப் பெண்களோடும் புணர்ந்தோம் புலியடி
த்து மாண்டு பேயானோம் என்றன.

இவ்வாறு பேய்கள் வசனங்களைக்கேட்டுக் கவுதமர்
இரங்கி நீங்கள் அஞ்சாதீர் உங்கள் துன்பங்களை நீக்
குவோம் என்னுடன்வாருங்களென்று கூற அவைக
ளும் அவரைத்தொடர்ந்தன. கவுதமர் சென்று பரம
சிவனுடைய திருவருளைத்தியானித்துச் சுகந்தவனத்
தையடைந்து உருத்திரதீர்த்தத்தைக்கண்டு இத்தீர்த்
தமானது புண்ணியதீர்த்தம் யாவற்றினுஞ்சிறந்தது
இதில் மார்கழிமாதம் பௌரணையில் கங்கையாதியாகி
ய புண்ணியநதிகளெல்லாம் வந்து மூழ்கித் தங்கள் பா
வங்களை நீக்கிக்கொள்ளுமென்றால் இதில் மூழ்குகின்
றவர் கயிலாயமடைவரென்று சொல்லவேண்டுமோ.
ஒருவன் அன்போடும் இத்தடாகத்தில் மூழ்கிப் பிதி
ரர்களுக்குத் தற்பணாதிகள் செய்தால் அப்பிதிரர்கள்
நீரகத்திலிருந்தாலும் கரையேறுவார்கள். இத்தீர்த்
தத்தை நினைத்தாலும் அளவற்றசெல்வமும் புத்திர
பாக்கியமு முண்டாம். தீர்க்காயுளுண்டாகுமென்று
அங்குள்ள மறையவர்க்குச்சொல்லி அன்று மார்கழிப்
பூரணை யாதலால் அதின்மூழ்கிக் காளீசனைத்துதித்
துப் பின்பு அத்தடாகத்தின் கரையில் வரிசையாயுட்
கார்ந்திருந்த பேய்களின்மேல் அப்புண்ணியநீரை
வாரியிறைத்தார் அவைகள் பேயுருநீங்கித் தேவரூப

மாய் விமானத்திலேறிக் கைலையையடைந்தன. அங்குள்ள அருந்தவர்களும் மறையவர்களும் புகழ்ந்து இத்தன்மையையுடைய புண்ணிய தீர்த்தத்தை யுலகெங்குங்கண்டதில்லை யென்று துதித்தார்கள்.

பேய்கள் சாபநீங்கியபடலம் முற்றிற்று.

---

## கஅ-வது. கங்கை சாபந்தீர்ந்தபடலம்.

பேய்கள் சாபநீங்கிய சரித்திரத்தை மொழிந்தோம். இனிக் கங்கைபாபநீங்கிய சரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார்.

அந்த ஐராவதக்ஷேத்திரத்திலுள்ள மறையவர் யாவரும் அந்த உருத்திர தீர்த்தத்தில் மூழ்கிக் கௌதமமுனிவரைத் துதித்துச் சொல்லுகின்றார்கள். முனிவரே உமக்கெதிரினின்ற பேய்கள்மேல் நீரை வாரி யிறைத்தவுடன் மின்னலை நிகர்த்த சரீரத்தோடு விளங்கினார்களே இவர்கள் யாவர் இவர்கட்குப் பேய் வடிவு வந்தவாறென்னவென்று கேட்கச், சேதுவில் தையமாவாசையினீராட வழியில்வந்தேன் இப்பேய்கள் படுந்துயரத்தைக் கண்டேன் அப்பேய்கள் செய்தபாவங்கள் நாவாற் சொல்லத்தக்கதல்ல உருத்திர தீர்த்தத்திலாடிப் பேயுருநீங்கிக் கைலையடைந்தார்களென்று முனிவர்கூற வேதிய ரதிசயித்து உருத்திர

தீர்த்தமென்று பேர்வந்தவரலாறும் அதின் மான்மிய மும் விரித்துரைக்கவேண்டுமென முனிவர்கூறுகின் றார். முற்காலத்திற் காளீசப்பெருமான் சடையிலுள் ள கங்கையினால் உலர்ந்த மீன்களை நனைக்க உருத்திர வடிவுற்றன ஆதலால் இத்தீர்த்தத்தை நினைத்தமாத்தி ரத்தில் மற்றெந்தத்தீர்த்தங்களிலாடியபயனையுங் கொ டுக்கும் இத்தீர்த்தத்தில் மூழ்கவெண்ணி மூன்றடி வைத்தாலும் மூழ்கினபலனைக் கொடுக்கும் சோம வாரத்தி லித்தீர்த்தத்திலாடினால் அறுபத்தாறுயி ரங்கோடி தீர்த்தத்திலும் மூழ்கினபலனைக் கொடுக் கும் இத்தீர்த்தத்தை நினைத்தாலும் பரிசித்தாலும் மூழ்கின பயனை யடைவார்கள். இதன் மான்மிய மொன்று சொல்லுகின்றேன் கேளுங்களென்று கௌ தமர் சொல்லத்தொடங்கினார்.

முற்காலத்திற் கங்கையாதியாகிய நதிகள் தங்களி டத்தில் மூழ்கினவர்களுடைய பாபங்களைத் தாங்க மாட்டாமல் பிரமாவிடஞ் சென்று பணிந்து பூமியி லுள்ள மனிதர்களெல்லாம் தங்கள் பாவங்க ணீங்க எங்களிடம் வந்து ஆடுகின்றார்கள் அப்பாவங்களை நாங்கள் பெற்றுக்கொள்ளுகின்றோம். அப்பாவங்க ளை நீக்கும்வழியை யருள்வாயெனப் பிரமாகேட்டு உங்கள் பாவங்க ணீங்கும்படிச் சொல்லுகின்றோம், பூமியிலே வைகைநதிக்கு வடபாகத்திலுள்ள காளி புரத்தில் உருத்திரதீர்த்தமென்று ஒரு தீர்த்தமுண்டு அத்தடாகத்திற்சென்று மார்கழிமாதத்திற் றிருவா

திரையும் பூரணையுங்கூடிய தினத்தில் மூழ்கினற் பாவநீங்கி உங்களிடஞ் செல்லலாம் என்று மொழிந்த வாக்கியத்தைக் கேட்டு அவரைப்பணிந்து பூமியில் வந்து சோதிவனத்தை யடைந்து அவர் சொல்லிய தினத்தில் உருத்திரதீர்த்தத்திலாடிப் பரிசுத்தமாய் அவ்வுருத்திரதீர்த்தத்தின் மான்மியத்தைத் துதித்து அந்நதிகள் தத்தமிடத்திற்குச் சென்றன. ஆதலால் மார்கழிமாதத் திருவாதிரையும் பூரணையுங் கூடிய தினத்தில் கங்கையாதியாகிய நதிகளெல்லாம் வந்து மூழ்கி மகிழ்வார்களாதலால் அந்நாளில் மூழ்கினவர்கள் இச்சித்தவெல்லா மடைவார்களென்று கௌதமர் கூற அந்தண ரனைவருங் கேட்டுத் துதித்தார்கள்.

கங்கைசாபந்தீர்ந்தபடல முற்றிற்று.

---

## கக - வது.

## கௌதமர் ஞானோபதேசப்படலம்.

கங்கை பாபந்தீர்த்த சரித்திரத்தை மொழிந்தோம் கௌதமர் ஞானோபதேசம்பெற்ற சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள் சௌனகாதிமுனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

கௌதம முனிவர் உருத்திரதீர்த்த மான்மிய முழுமையும் புகன்று நித்தியக்கடன் முடித்து இடபவாகனத்தின்மே லெழுந்தருளிய சிவகாமி சிதம்பரேசுர

கா வீதியிற்கண்டு பணிந்தார். பின்பு காளீசர் கோ
யிலுட்சென்று மும்முறை வலம்வந்து பணிந்து எட்
டுச் சுலோகங்களினுற் றுதிக்கச் சிவபெருமான் அருள்
வடிவாய்த் தோன்றி இரண்டு கண்களிலு மாநந்தக்
கண்ணீர் பெருக நாத்தழுதழுத்து நின்ற முனிவரை
ப்பார்த்து நின்றுதியை மகிழ்ந்தோம் எம்மாற் பெறத்
தக்கவைகளைக் கேட்பாயென்று கூறச் சச்சிதாநந்த
பூரணநாகிய உமது கருணையினுற் சனன மரண மில்
லாதமுத்தி யனுக்கிரகிக்க வேண்டுமென்றுகூறப் பிர
ணவப் பொருளாகிய சிவபெருமா னுண்மகிழ்ந்து அரி
பிரமற்கரிதாகிய எமதுருவை இலிங்கத்துண்மறைத்
து அடியார்கள் பரவும்படி நிற்போம் பேரறிவையு
டைய துறவிகள் எம்மைச் சுவசொரூபமாய்க் காண்
பார்கள். திருவாரூர் திருவானைக்கா அருணை தில்லை
காளத்தி காசி இவை முறையே மூலாதாரம் சுவாதிட்
டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞை
என்று அறிந்து தரிசித்தார் கைலையையுந் தரிசிப்பார்
அக்கைலையானது பிரமரந்திரமாம், மதுரை துவாத
சாந்தமாகும், அதற்குமேற்பட்ட சூக்குமம் இச்சோ
திவனமாம். இதில் சோதிவடிவமாய் எக்காலமும்
வீற்றிருப்போம் பிரளயகாலத்திலும் இவ்விலிங்கமழி
வதில்லை. ஒன்றாயும் பலவாயும் சச்சிதாநந்தமாயும்
நான்கு வேதங்களின் முடிவாகிய மகாவாக்கியங்க
ளாயும் இருக்கும்பொருள் நாமே ஆத்துமதத்துவமும்
பிரமதத்துவமு மறிந்து சுகதுக்கங்களை விட்டு நித்திய

மாய் ஐந்தொழிற்கும் காரணமாய் அணுவாய் மகத்தாய் வேதங்களுக்கு மெட்டாமல் விளங்கும் பொருள் யாமேயொழிய வேறில்லை. பஞ்சபூதம் இரவி மதி இயமானன் என்னும் அட்டமூர்த்திகளாயும் விளங்கும்பொருள் யாமேயென்று யாவ ருணர்கின்றாரோ அவரே வினையனைத்து நீங்கி யெம்முட்கலப்பவராவர். என்று கூறி நின்னுடையவரவை எதிர்நோக்கி அநேக முனிவரிருக்கின்றார்க ளாதலால் தநுக்கோடியில் மூழ்கிவந்து இங்குவசிப்பாய் அன்றியும் நின்னாற் சொல்லப்பட்ட தோத்திரத்தைப் பத்தியோடு சோமவாரத்திற் றுதிப்பவர்களுக்கு எண்ணிய வரங்களெல்லா மளிப்போமென் றருளிச்செய்து மூலலிங்கத்துட் புகுந்தருளினார்.

கவுதம முனிவரானவர் சிலநாளங்கிருந்து தநுக்கோடிக்குப்போய் மூழ்கிப் பர்வதவர்த்தனியோடு இராமலிங்கத்தையுஞ் சேதுமாதவனையுந் தரிசித்து உத்தரகோசமங்கைக்குச் சென்று மங்களேசுரனைத் தரிசித்துத் துதித்து நிற்கையில் அச்சந்நிதியில் விபூதியுருத்திராக்கம்பூண்டு ஓர் வேதியன் நடிக்கும்போது அம்மங்களேசுரரானவர் அசரீரியாய் நின்று அந்தணனையழைத்து உனக்கு மூன்று சன்மத்தில் முத்தி தருவோம் இப்பிறப்பில் முத்தி வேண்டுவையாயிற் சோதிவனஞ் சேர்கவென் றருளினார். அங்குள்ளோரனைவருங் கேட்டுக் களித்தார்கள் கௌதம முனிவரும இவையெலா மூணர்ந்து உடல் புளகிக்க ஆநந்

றித் தவ்விடம் விட்டு நீங்கிச் சோதிவனத்தையடைந் து காளீசனைத் தரிசித்து மகிழ்ந்தார். அங்குள்ள முனிவரனைவருங் கௌதமரைக்கண்டு மகிழ்ந்து வணங்க அம்முனிவரும் உத்தரகோசமங்கையி னடந்தவர்த்தமானங்களை அவர்கட்குரைத்துக் காளீசர் தன்னை யிங்கிருக்கும்படித் திருவாக்களித்தது முரைத்து அவ்விடத் திருந்தார்.

உத்தரகோசமங்கையு ளிருந்த சிவதத்தனென்னும் மறையவரும் அவ்விடம்வர அங்குள்ள முனிவரனைவரும் பூசித்தழைத்து நடந்த வரலாற்றை வினவ அவருங் கௌதமருரைத்த வண்ணமே யுரைக்கக்கேட்டு அனைவரு மாநந்தித்தார்கள் அம்மறையவரும் முனிவரும் சிலநாளங்கிருந்து காளீசமூலலிங்கத்துட் சோதிவடிவாய்க் கலந்தார்கள்.

கௌதமர் ஞானோபதேசம்பெற்றபடல முற்றிற்று.

---

## உO - வது. வெள்ளையானை சாபந்தீர்ந்தபடலம்.

கௌதமர் ஞானோபதேசம்பெற்ற சரித்திரத்தை மொழிந்தோம், இனி வெள்ளையானை சாபந்தீர்ந்த சரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதிமுனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார்.

தேவேந்திரனனவன் முற்காலத்தில் தனதாசிரியுராகிய வியாழபகவானைக் காணுமற் றேடிக்கொண்டு வெள்ளையானையி லேறிக் கைலாயத்திற் சென்று சிவபெருமானை வணங்கி அங்கிருந்த தனதாசிரியனையழைத்துக்கொண்டு திரும்பும்போது அந்த யானையானது சிவபெருமானுடைய சந்நிதியினின்ற இடபத்தின்வாலைத் தனது துதிக்கையாற் பிடித்துக் கருவங்கொண்டிழுக்க அந்நந்திதேவர் கோபித்து நீ இரண்டுகொம்புகளையுடைய காட்டானையாய் ஆயிர வருடகாலம் வருந்தக்கடவா யென்று சபிக்க, ஐராவதமானது வணங்கித்துதிக்கச் சிவபெருமான் கருணைகூர்ந்து மதுரைநகரத்திற்கு வடகிழக்கிலுள்ள சோதிவனத்தி லாயிரவருடமுஞ் சஞ்சரிப்பாய் பின்பு அவ்வனத்திலுள்ள காளிபுரத்தில் நாமே சாபத்தினின்று மீட்டருள்வோ மென்றலும், காட்டானையாகிப் பூமியிற் சென்றது தேவேந்திரனும் ஆசிரியரோடு சுவர்க்கம் புகுந்தான்.

பூமியில்வந்த அந்த யானையானது விந்திய மலைக்கருகில் நருமதாநதி தீரத்திலுள்ள சோலைகளிற் பலநாட்சஞ்சரித்துச் சையமலையை யடைந்து அங்குள்ள பெண்யானைகளெல்லாங் கைகளாற்றீண்டித் தங்கள் புணர்ச்சிக் குறிப்பை யுணர்த்த அவைகட் கிணங்காது எங்குந் திரிந்து சோதிவனத்தை யடைந்து யானைகள் வேங்கையின் பல்லிற்றுதிக்கையை யுரிஞ்சித் தினவு நீக்குதலையும் பசுவின் கன்று புலியின் மடியிற் பா

லுண்பதையுங் கண்டதிசயித்துத் தவமுனிவர்களின் ஆச்சிரமங்களை நோக்கிக் கொண்டு மெல்லச் செல்லும் போது அங்குத் தவம்புரியுங் கார்க்கியமுனிவர் கண்டு சிவபெருமானு லனுப்பப்பட்ட யானையென்று ஞானக் கண்ணாலறிந்து ஓ யானையே இதுதான் சோதிவனம் கயிலையிற் சிவபெருமான் சொல்லியவாறு இவ்விடத் துன் சாபநீங்குமென்று கூறக் கேட்டுச் சிலநாட்சென் றபின் சிவபெருமானைப் பூசிக்க வெழுந்து திருக்கோ யிலை நோக்கிச்சென்று சிவகங்கையி னீராடக்கருதிச் செல்லும்போது சிவபெருமான் அதனுள்ளஞ் சோதி க்கவிரும்பி அதிலுள்ள நீரெல்லாம் விளாவில் வற்றும் படி செய்தார். அத்தடாகத்தில் நீரில்லாம லிருப்ப தைக்கண்டு இதுவுஞ் சிவபெருமானுடைய திருவி ளையாட்டென்று நினைத்துத் தனது கொம்பினுற் பூமி யைக்குத்தித் தள்ளப் பாதாளமட்டும் பிளந்து தண் ணீர் நிறைய அதில் மூழ்கிக் காளீசனைப் பூணிந்து மகிழ்ந்தது. இப்படியிருக்க ஆதிசேடனும் ஆதிகூர் மமும் அக்கங்கையிற் றோன்றி நிற்க அவர்களை யா ரென்று யானைகேட்க. அவைகள் மொழிகின்றன.

நாங்களிவ்வுலக மெல்லாந்தாங்க வல்லமையை யுடையோமென்று கருவங்கொண்டோம் அதினுல் யாங்கள் பலமிழந்து காளீசனைவேண்ட எங்கட்கு நீலகண்ட மந்திரத்தை யுபதேசித்துச் சோதிவனத் தை யடைந்து நமது சந்நிதியிலிருந்து சிந்தியுங்கள் உங்களுக்குப் பலமுண்டாகுமென்று சிவபெருமா

னருளாற் கூற யாங்கள் வந்தோமென்று சிவகங்கை யில் மூழ்கிச் சோமேசர் சந்நிதியினின்று பலநாள் செபிக்கச் சோமேசர் அவைகட் கெதிரிற்றோன்றிப் பலமருளப் பெற்றுப் பாதலஞ்சென்று தங்கடொழி லைச் செய்து நின்றன.

ஐராவதமானது விடியற்காலத்திற் சிவகங்கையில் மூழ்கித் துதிக்கையினாலே தண்ணீரை முகந்து கொண்டு வந்து காளீசற்கும் சோமேசற்கும் அபிடேகஞ் செய்து மலர்களைப் பறித்துச் சாத்தித் தன்வாயினால் வாத்தியமுழக்கித் துதிக்கச் சோமேசர் கருணைகூர்ந்து அருட்கண்ணா னோக்கச் சாபநீங்கி முன்போல் நான்கு கொம்பையுடைய வெள்ளையானை யாகிமகிழ்ந்து சிவபெருமானை நோக்கி இத்தடாகம் என்பெயரால் விளங்கவேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபெருமானும் அப்படியே வரமளித்தார். அன்றுமுதல் யானைமடுவென்றும் பாதாளகங்கையென்றும் பெயர் பெற்றது. அன்றியும் ஊழ்வினைகளையும் வறுமையையும் போக்கத்தக்க தீர்த்தமென்றும் சிவகங்கையென்றும் பெயர்பெறும். அத்தலத்திற்குப் பெயர் ஐராவத நகரமென்றுங் கூறுவார்கள்.

வெள்ளையானை சாபந்தீர்த்தபடலம் முற்றிற்று.

---

## உக-வது. இந்திரன் சாபநீங்குபடலம்.

வெள்ளையானை சாபந்தீர்ந்த சரித்திரத்தை மொழிந்தோம் இனி இந்திரன் சாபந்தீர்ந்த சரித்திரத்தைக் கேளுங்களென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

தேவேந்திரனானவன் முன்னொரு கற்பத்தில் சம்பனெனும் பெயர்பெற்ற அசுரனைக் கொன்று பேரிகை முழங்கவும் தேவர்கள் மலர்மாரி தூற்றவும் வெள்ளையானை மீதேறி அரண்மனைக்கு வந்து சிங்காதனத்திலிருந்துகொண்டு போர்க்களத்தில் உதவிசெய்த தேவர்கந்திருவர் முதலியவர்க்கு அவ்வவர்க்கேற்ற பரிசிலளித்து இந்திராணியுடன் மகிழ்ந்திருந்தான். மற்றொருநாட்காலையிற் சிங்காதனத்தில் வீற்றிருந்துதன தாசிரியனைக்காணாது உயிரிழந்தவன்போல வருந்துகையில் நாரதமுனிவர் வரவைக்கண்டு பணிந்து அவர்க்கு முகமன்கூறி இங்குவந்ததென்னவென்று கேட்க நான் கைலையிற் சிவபெருமானுடைய சந்நிதியினிற்கும்போது உனது குருவைக்கண்டேன் அவருடைய மலர்ச்சியில்லாத முகத்தையுங் கண்டேன் நீ வெற்றியடைந்ததையுங் கேட்டு உன்னைக் காணவந்தேனென்றுகூற யான் எமதாசிரியராகிய குருவுக்கு என்னகுற்றஞ்செய்தேன் அவருக்கு வருத்த மென்ன புகன்றருள்வீரென்று கூற நாரதமுனிவர் இந்திரனைப்பார்த்துக் குருவினுற் சொல்லப்பட்ட யுத்தியினும் பகைவனைவென்ற நீ உன்னுடன் வந்தவர்களை யெல்லா

மதித்துச் சன்மானஞ்செய்தாய் அவரை மதியாமை யால் வருந்தி வேறிடத்தடைந்தார் அப்படிச்செய்த து உன் குற்றமன்றோ ஆசிரியரோ பரமசிவனுதலால் அவர் மகிழச்செய்தாற் குறைவற்ற செல்வமுண்டா கும். ஆசிரியர் மனத்தினுள் வெறுப்பாராயிற் செல் வங்களனைத்து நீங்கும். ஆசிரியனையே தெய்வமாகப் பாவிப்பவருக்கு யாதொரு குறையுமில்லை ஆதலால் நீ போய் உன் குருவை நயந்துகொள்ளென்று முனி வர் கூற ஐராவதத்தின் மேலேறிக் கைலாய கிரிக் குச்சென்று யானையினின்றிறங்கி நந்தியெம்பெருமா னிடத்து விடைபெற்றுக்கொண்டு சிவ பெருமானி டஞ் செல்லும்பொழுது சிவகணங்கள் வந்து தடுக்க அவர்களை லவமதிக்கப்பட்டும், நமது நகரத்தில் கற் பகம் சிந்தாமணி காமதேனு சங்கநிதி பதுமநிதிமு தலியவைகளிருக்கின்றன இங்குள்ள வெல்லாம் விபூ திருத்திராக்கத்தை யன்றி மற்றொன்று மில்லை இங் குள்ளவர்களோ பூதகணங்கள் அரசனெப்படியோ அப்படியே பிரசைகளுமென்று நினைத்துக்கொண்டு உட்சென்று சிவபெருமானைக்கண்டு பணிந்து நிற்கச், சிவபெருமான் இந்திரனைப்பார்த்து நீ கருவமுற்றாய் குருவையுமவமதித்தாய் நமது கணங்களையும் இகழ்ந் தாயாகையால் நீ பூலோகத்து மனிதனுக்கடவாயெ ன்று சபிக்க இந்திரன் பயந்து ஒளித்திருக்கின்ற குரு வைக் காணும்பொருட்டிங்கு வந்து இச்சாபத்தை ஏற்றேன். குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண் டவருக் கொப்பானேன். நாரதமுனிவராற் சொல்

லப்பட்ட உண்மைமொழி பலித்ததென்று நினைத்துக் கண்ணீர்சோரத் திருவடிகளில் வீழ்ந்து எழுந்து நின்று சிவபெருமானைப் பன்முறை துதித்து உம் மையே நம்பிய என்பிழையைப் பொறுத்தருளல் வேண்டும் உம்மையன்றி வேறுதுணையில்லை யென்றி ரந்து நிற்கச் சிவபெருமா னுளங்குளிர்ந்து உனக்கு வேண்டியவற்றைக் கேளென் றருள எனது சாப நீங்கவும் குருவைக் காணவும் அருள் புரிய வேண் டு மென்று வேண்டச் சிவ பெருமான் பூலோகத் திற் பாண்டிநாட்டிலே மருத்துவானென்னும் பெய ரையுடைய அரசனாகி நமது காளிபுரத்தில் வந்து நம் மைப் போற்றிக் கோபுரமண்டபங்கள் முதலியவை களையு முண்டாக்கித் திருவிழா நித்தியபூஜை முதலிய வைகளும் விதிப்படி நடப்பித்து நான்குவருணத்தார் களையுங் காப்பாற்றி நூறுவருடம் வாழ்ந்திருந்து சுவர் க்கத்தை யடையக்கடவா யென்று கூறச் சிலநாட் சென்றபின்பு தேவேந்திரனும் பாண்டியநாட் டரச னாய் மருத்துவா னென்னும் பெயரோடு மிராசதரு மங்கள் வழுவாது அரசுபுரியுங் காலத்தில் ஒருநாள் சோதி வனத்தை யடைந்தான் அப்போது அவன் மனதில் முந்தி நடந்தவைக ளெல்லாந் தோன்றச் சிவகங்கையில் மூழ்கிச் சோமேசனையுங் காளீசனை யும் பணிந்து போற்றிக் காலெலாமழித்துக் காளீ சருக்குஞ் சோமேசருக்கும் விமானம் கர்ப்பக்கிரகம் மண்டபம் கோபுரம் முதலியவைகளை யுண்டாக்கி

வீதிகளுங் கடைத்தெருக்களு முண்டாக்கிச் சோ மாக்கந்தர் முதலிய விக்கிரங்களெல்லாஞ் செய்வித்துக் காஞ்சிபுரத்திலிருந்து ஆதிசைவர்களை வரவழைத்து விதிப்படி ஆறுகால பூசையுஞ் செய்வித்து அட்டதிக்கிலும் காளியைத்தாபித்து அநேககோடி திரவியங்களால் திருவாபரணங்களுஞ் செய்வித்துத் தனக்கு நூறுண்டு நிரம்பிய தறிந்து சிவகங்கையில் மூழ்கிக் காளீசனைப்பணிந்து போற்றி அன்போடு உடல் புளகிக்க நின்று துதிக்கக் காளீசரும் அருள் வடிவாய்த்தோன்றிக் கூறுகின்றார் நினது துதியை அங்கீகரித்தோம் உனதுசாபமும் இன்றோடு நீங்கிற்று. உனக்கு வேண்டுவனவற்றைக் கேட்பாயாக வென்று சிவபெருமான் கூற மருத்துவ.னைவன் நான் சுவயரூபத்தோடு எக்காலமும் உம்மைப்போற்றும் பத்தியை யருளவேண்டுமென்று வேண்ட வருடந்தோறும் வைகாசி மாதம் பூரணையிலெம்மைப் போற்றக்கடவாய் இப்பொழுது ஐராவதத்திலேறித் தேவருலகஞ்சென்று சுகமாய் வாழக்கடவாயென்று திருவாக்களித்து இலிங்கத்துட் புகுந்தருளினர்.

அம்மொழியை மருத்துவானு யிருந்த இந்திரன் கேட்டு ஐராவதத்தின் மேலேறித் தேவர்கள் மலர் மாரிதூற்றத் தனது நகரம் புகுந்து ஐந்தரு நீழலி லரசு வீற்றிருந்தான்.

இந்திரன் சாபநீங்கியபடல முற்றிற்று.

---

## உஉ-வது. கண்ணுவப்படலம்.

இந்திரன் சாபநீங்கிய சரித்திரத்தை மொழிந் தோம் இனிக் கண்ணுவர் சரித்திரத்தைக் கூறுகின் ேறாம் கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

பூலோகத்திலே கன்னடதேயத்தில் வராகபுரத்தில் காசிப கோத்திரரும் ஆறு கர்மங்களையும் வழுவாமற் செய்பவரும் விபூதி ருத்திராட்சதாரியும் காமவிரத் தியருமான கண்ணுவரென்ெறாரு மறையவ ரிருந்தார் அவர் தவப்பேற்றினற் சுசரிதனென்னும் ஒரு புத் திரனைப்பெற்று அவனுக்கு வேதமுதலிய நூல்க ளியாவையுங் கற்பித்து விவாகஞ் செய்வித்து இல் வாழ்வில் வைக்க அப்புத்திரனும் தந்தை சொற்படி நடந்தான். தந்தை அதை யறிந்து புத்திரனை வீட்டி லிருத்தி அவர் வேறிடங்களுக்குச் சென்று ஊழ்வினை யால் பாசண்டர்களுடன்கூடிக் கருமாநுட்டான ஆசா ரங்களை விட்டுத்திரிந்து கொடிய கயரோகங்கொண்டு மிகவ்ருந்திப் பற்பல ஔடதங்க ளுட்கொண்டும் நீங் காமையால் மீட்டுந் தன்வீட்டிற்குவந்து தன் புத்தி ரனையடைந்து சொல்லுகின்றான். பாவியாகிய நான் அநேக பாதகங்களையுஞ் செய்து வேதநெறியைக் கைவிட்டுப் பொய்யர்களைக் கூடி நல்லோர்களைத் தூஷித்து அநேக தீவினைகளைச் செய்தேன் இனி யான் பிழைப்பதில்லை என்னை நரகத்திற் சேர்த்தா லும் அதற்கு ஒரு பரிகாரஞ் செய்ய நினைக்கின்

றேன், நீ எனக்காகச் சேதுவில் மூழ்குவாயென்று சொல்ல அப்படியே புத்திரனும் சேதுவிற்குப் புறப் பட்டுத் தன்னுட்டைக் கடந்து சோதிவனத்தை யடைந்து அதன் மேன்மையுங் கீர்த்தியுங்கேட்டு ஓர் பக்கத்தி லானைமடுவையுங் கண்டான்.

விடியற்காலத்தில் விதிப்படி மூழ்குவோமென்று நடந்துவந்த இளைப்பினால் சோர்ந்து நித்திரை செய் தான் அவன் பிதா கனவிற் ரேன்றக்கண்டு உமது பிணியொழிந்ததோ எங்கு நின்று வருகின்றீரென வணங்கச் சுசரிதனைப் பார்த்துப் பிதா கூறுகின்றான் நீ யகன்றபின் என்னிடம் காலதூதர்கள்வந்து எனக் குக் கொடிய தண்டனைக ளனைத்துஞ்செய்து நரகத் திற் றள்ளக் கொண்டுபோம்பொழுது என்முன் இய மன்வந்து இவனுடைய புத்திரன் அன்போடு சோதி வனத்திலுள்ள யானைமடுவில் மூழ்க நினைத்து அவ் விடத் துறங்குகின்ற ஞதலால் இவனை விடுங்க ளெ ன்று சொல்லி என்னை யழைத்து உடற்பிணி யனை த்துநீங்கி உன்னிடஞ்சென்று வாழ்வாயென்று விடை கொடுக்கத் திரும்பி வந்தேன் என்றுரைத்த வுடன் விழித்துக்கொண்டு அங்குள்ளவ ரனைவர்க்குஞ் சொ ல்லி யானைமடுவில் மூழ்கி ஆநந்த வெள்ளத்திலு மூழ்கித் தன்னிடஞ்சென்று தந்தையை வணங்கி ஞன். அவன் கனவிற் கண்டவண்ணமே தந்தையுஞ் சுகமாயிருக்க இருவருங் கனவின் பயனைவியந்து நா டோறும் ஆனைமடுவைத் துதித்துக்கொண் டிருந்தார் கள். ஆதலால் இந்த யானைமடுவில் ஒருதரம் மூழ்கி

னிலும் சத்த சமுத்திரங்களிலும் கங்கையாதி சர்வ தீர்த்தங்களிலும் மூழ்கிய பலத்தை யடைவார்கள்.

கண்ணுவப்படல முற்றிற்று.

## உ௩ - வது. தேவசேனப்படலம்.

கண்ணுவர் சரித்திரத்தை மொழிந்தோம் இனித் தேவசேனன் சரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார்.

சிங்கள தேசத்தில் விசாலநகரத்தை யரசாண்ட தேவசேனனென்ற அரசன் நீதிமுறை தவறாது சிவபத்தி யுடையனாய் அரசு புரியுங்காலத்து ஒருநாள் வனத்தில் வேட்டையாட யானைமீ தேறிக்கொண்டு சேனைசூழக் காட்டிற்சென்று சிங்கம் பன்றிமுதலிய மிருகங்களை யெல்லாங் கொன்று ஒரு மானைத் துரத்திக்கொண்டு சென்றான். அந்த மானானது வெருண்டு ஓடி ஓர் இருண்ட சோலையில் தவஞ்செய்கின்ற ஒரு முனிவர் பக்கத்தில் ஒளித்துக்கொண்டது. அவ்விடத்து மான்றோலைப் போர்த்துத் தவஞ்செய்கின்ற அம்முனிவனை மானென் றெண்ணிப் பாணத்தை விட அம்முனிவர் மாண்டார் அவர் மாண்டவுடன் அரசனறிந்து நடுநடுங்கி நிற்கையில் அவர் மனைவி மனந்தளர்ந்து எனது கணவனை எய்ததினால் உன்வாழ்வு கெடுகவென்று சாபமிட்டாள் அரசனை அப்பா

வந்தொடர மயங்கி வீழ்ந்தான். அப்பொழுது அவன் சேனைகளெல்லாம் வருந்திச் சென்றூர்கள். அஃதறிந்து அவன் பகைவர்கள் பூமியெல்லாங் கவர்ந்து கொண்டார்கள். பிரமகத்தி யரசனைத் துரத்தத் துக்கத்தோடு எங்கும் அலைந்து திரியுங்காலத்தில் முற்பிறப்பிற்செய்த நல்வினைபயனால் அவ்வரசன் சோதிவனத்தை யடைந்து யானைமடுவை நெருங்க நெருங்கப் பிரமகத்தியு நீங்க யானைமடுவைக்கண்டு தாபந்தீர மூழ்கினன். அரசனைப்பற்றிய பிரமகத்தியோடு முன்னுள்ள வினைகளுநீங்கின அரசன் பரிசுத்தனானதைக்கண்டு அங்குள்ளவ ரனைவரும் யானைமடுவின் சிறப்பைப் புகழ்ந்தார்கள். அரசனும் அகமகிழ்ந்து காளீசரைப்பணிந்து நின்று துதிக்கக் காளீசர் அவன் முன்பு அருள்வடிவாயத் தோன்றி உன்னை வருத்திய பாதகத்தை யொழித்தோம். நின் பகைவர்கள் துன்புற்று வருந்தினர்கள். இன்னும் நான்கு தினத்தில் உன் நண்பர் வருவார் அவரோடு நீ உனது நகரத்தை யடைவாயென்று கூறிய திருவாக்கைக்கேட்டு அரசன் மனங்குளிர்ந்து இருக்கையில் சிவபெருமான் சொல்லிய நாளில் அவனுடைய சிநேகர்வந் தழைக்க அவரோடும் *தன்னகரிற்சென்று இராச்சியத்தையும் பெற்றுவிசாலை நகரத்தில் வாழ்ந்திருந்தான். ஆதலால் யானைமடுவில் மூழ்குவோர் எப்பொருளையு மடைவார்கள்.

தேவதாசப்படல முற்றிற்று.

## உ௮ - வது. மகாகாளப்படலம்.

தேவசேனன் சரித்திரத்தை மொழிந்தோம். இனி மாகாகாளன் சரித்திரத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர்.

உலகமெங்கும் வணங்கத்தக்க இமாசலத்தின் ஒரு பாகத்தில் முனிவர்க ளனைவரும் கூடிக் காசிபமுனிவரைப் போற்றி எங்களஞ்ஞானங் கெட வேதாந்தத்தினுட்பொருளை யுரைத்தருள்வீ ரென்றுவேண்ட அவரும் நன்றென்று அவ்வுண்மைப் பொருளையெடுத்து மொழியும்போது சிவகணங்களுள் முதன்மை பெற்றோனாகிய மகாகாளனென்னும் ஒருவன் அக்காசிபனை நோக்கி அம்மொழிக்கு அது பொருளன்றென்று நிராகரிக்கக் காசிபர் கோபித்து அம்மொழியின் பொருளை யறியாமற் சொல்லியபடியால் இக்கணமே நீ ஊமையாகக்கடவையென்று சபித்தவுடன் மகாகாளன் இன்சொற்கூறி வணங்கி நிற்க அம்முனிவர் கோபநீங்கி அன்புமிகுந்து காளிபுரஞ்சேர்ந்து யானைமடுவில் மூழ்கிக் காளீசனைப் பூசித்தாலிச்சாப நீங்குமென்றார். அம்மகாகாளனுஞ் சோதிவனத்தை யடைந்து யானைமடுவில் மூழ்கிக் காளீசனை அநேக வருடகாலம் பூசிக்கக் காளீச ரருள் வடிவாய்த் தோன்றி உனது பூசையை மகிழ்ந்தோம் ஊமைத்தன்மை நீங்கி வேதாந்தத்துட்பொருளை

அ

ல்லா மூணாக்கடவாய் என்றருள உடனே மூகநீங்கிப் பல அலங்காரம் பெறப் பலகவிகள் பாடிப் பரமசிவனைத் துதித்தான். சிவபெருமான் அத்துதியை மகிழ்ந்து இடபவாகனத்திற் ரோன்றிப் பட்டபரணனென்று பேர்பெறுவாயென்றுகூறி இன்னும் வேண்டியவரங்களைக் கேட்பாயென்றருள மகாகாளன் கூறுகின்றான் சிவபெருமானே உம்மைத் துதிக்கப்பட்ட என்பெயரே உமக்கும் உமது தலத்திற்கும் வழங்கவேண்டுமென்று மகாகாளன் வேண்டச் சிவபெருமான் அப்படியே யாகுகவென்று மூலலிங்கத்தி லொளித்தருளினார். மகாகாளனும் மகாகவியாய்க் கைலையை யடைந்து வாழ்ந்தான். அன்று தொட்டு மகாகாளேச்சுரரென்றும் மகாகாளபுரமென்றும் பெயர்கள் வழங்குகின்றன.

மகாகாளேசப்படலம் முற்றிற்று.

## உரு - வது. சோமநாதப்படலம்.

மகாகாளன் சரித்திரத்தை மொழிந்தோம். இனிச் சோமநாதர் சரித்திரத்தை மொழிகின்றோ மெனச் சௌனகாதி முனிவர்களைப் பார்த்துச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

தேவவரும ராசனுனவன் சுமந்து முனிவரைநோக்கித் தூலலிங்கத்திற்கு உமாதேவியை வாமபா

கத்தி லுடைமையால் சோமேச ரென்கிற பெயர் பொருந்தும். சோமநாத ரென்கிற பெயர்க்குக் கா ரணம் யாதென்று வினவ முகமலர்ச்சியோடு சும ந்து முனிவர் கூறுகின்றார் பிரமதேவருடைய காற் பெருவிரலிற் றோன்றிய தக்கனனவன் ஐம்பதுபெ ண்களைப் பெற்றான். அவர்களி லிருபத்தேழு பெண் களைச் சந்திரனுக்கு விவாகஞ்செய்துகொடுக்க அச் சந்திரன் அம்மாதர்களில் உரோகணியிடத்தி லா சையுற்று மற்றவர்களை விரும்பாமலிருக்க அப்பெ ண்கள் தந்தையிடத்திற்சென்று கூற அவனுங்கோ பித்து அச்சந்திரனை நோக்கி நீ க்ஷயரோகியாகக் கடவை யென்று சபிக்கச் சந்திரன் மனந்தளர்ந்து அவன் பாதத்தில் வீழ்ந்து இச்சாபத்தை நீக்கவேண் டுமென்றிரக்க அவன் கோபந் தணியாமல் எனது சாபத்தை நீக்கச் சிவனும்வல்லனோ முன்பு எல்லாப் பெண்களையுஞ் சமமாய்க்காண்கின்றே னென்று கூறி ய மொழியை யெண்ணாது பொய்த்தாய் நின்முகம் பாரேன் என்றலு நிசாசரனாகிய சந்திரன் மனந்தளர் ந்து பிரமவிட்டுணுக்களிடஞ் சென்று கூறியும் சாப நீங்காமையால் ககோளமுனிவர்பாற் சென்று தனது துயரைக்கூற அவர் பூலோகத்தில் உத்தமதலமாகிய சோதிவனத்திற் செல்வையாயி லுனக்கொரு விமோ சனங் கிடைக்குமென்று கூறச் சோமனும் சோதிவ னத்தை யடைந்து புண்ணியதீர்த்த முதலியவைகள் விளங்குவதைக்கண் டதிசயித்துத் தூல லிங்கத்தைக் கண்டு மகிழ்ந்து சந்நிதிக்குக் கிழக்கில் மூன்று விற்

கடை தூரத்தில் தன்பெயரினலே ஓர் தடாகமுண்டாக்கி அதிலுள்ள நீரினலே சிவபெருமானை யபிடேகஞ்செய்து விதிப்படி பூசித்தான். இவ்விதம் பன்னுட் பூசைசெய்ய ஒருநாள் அத்தூலலிங்கத்தினின்று சிவபெருமா னருள்வடிவாய்த் தோன்றிச் சந்திரன் முகத்தைநோக்கிக் கூறுகின்றுர், தக்கனலிடப்பட்ட சாபத்தை எவனும் நீக்கத்தக்கவனல்லன். ஆயினும் அதற்கோ ருபாயஞ் சொல்லுகின்றேம் பூர்வபக்கம் பதினைந்துநாள்மட்டும் தேவர்களுக்கு அமுதமளிக்கும்பொருட்டு உனது கலைவளர அளிக்கின்றேம் அப்படி வளர்தலா லிமையவரும் மனமகிழ்வார்கள்; உன்னுடலும் அமுதமூறிவளரும். தக்கன் சாபத்திற்கும் தாழ்வில்லையென்று கூறத் திங்களும் பிழைத்தேன் பிழைத்தேனென்று திருவடிகளில் வணங்கிக் கூறுகின்றுன். இன்றுதொட்டு என்ணுற்செய்யப்பட்ட தடாகத்திற்கு என்பெயர் வழங்கவேண்டு மென்று வேண்டச் சிவபெருமானு மப்படியே யாகுகவென்று கூறித் தூலலிங்கத்துட் புகுந்தருளினர். சந்திரனும் உடலம்பூரித்துப் புதியமதியாய் ஒவ்வொருகலையாய் வளரவளரத் தேவர்கட்கமுதளித்துப் பௌரணையில் நிரம்பி அமாவாசையி லொருகலையோடு நின்று பின்னும் அவ்வாறேவளர்ந்து கலையெல்லாம் நிறையும்படி விளங்கினன், அந்நாள்தொடங்கித் தூலலிங்கத்திற்குச் சோமநாதரென்று பெயர்வழங்கும் அவனுலுண்டாக்கப்பட்ட தீர்த்தத்துக்கும் சந்திரபுட்கரணி யென்று பெயராம் அத்தீர்த்தத்தில் மூழ்குவோர்க்குச்

செல்வம், கல்வி, அழகு, இன்பம் முதலியவைகளுண் டாம். அன்றியுங் கயரோகமுதலிய நோய்களு நீங் கும்.

சோமநாதப்படல முற்றிற்று.

---

## உசு-வது. சுந்தரமூர்த்திப்படலம்.

---

சோமநாதரான சரித்திரத்தை மொழிந்தோம்இனி ச் சுந்தரமூர்த்தி சரித்திரத்தைக் கூறுகின்றோம் கே ளுங்கள் சௌனகாதி முனிவர்களே என்று சூதபுரா ணிகர் சொல்லத்தொடங்கினர்.

பலவளம் பொருந்திய சோழநாட்டில் திருவாரூ ரென்னு நகரத்திற்றியாகராசப் பெருமானிடத்தன்ப ரும் சிவபெருமானுடைய பிரதிவிம்பத்திற் றோன் றியவரும் பூதிசாதனசைவ சமயாசாரியருமாகிய சுந்தரமூர்த்திகள் தன்னடியார் கூட்டத்தோடு தல ங்கடோறுஞ் சென்று சென்று தமிழ்ப் பாமாலையைச் சிவபெருமானுக்குச் சாத்தி உலகெங்குஞ் சுற்றிக் கொண்டு பாண்டிநாட்டிலுள்ள தலங்களைத் தரிசி த்துத் துதித்துக் குண்டாற்றின் கரையிலுள்ள திரு மடத்திற்றங்கி நித்திரை செய்யும்பொழுது காளீசரா னவர் ஒருமறையவர் வடிவாய் அவரது கனவிற்றோன் றியருளினர். சுந்தரமூர்த்திகள் ஐயா நீவிர் யாரெ ன்று கேட்க யாம் சோதிவனத்துள்ளேம். சிவபெரு மானைச் சொல்வளம்பெறப்பாடுகின்ற நீ உள்ளன் போடு நமையுந்துதி என்றவுடன் நித்திரை நீங்கி

எழுந்து அன்போடு அவ்விடத்திருந்தே காளீசனை பாடித் தூரத்திலுள்ள திருப்புனவாயிற் கேகமுயன் று கொண்டிருக்கும்போது காளீசர் அம்மையோடு ஒரு பிராமண வடிவாய்த் தோன்றி யருளினர். அப் போது சுந்தரமூர்த்திகள் நீவிர் யாரென்றுகேட்க அது பின்புசொல்வோம்; எங்கள் பசிக் கன்னமிடெ ன்று கூற உடனே மடைத்தொழிலாளர் சமையல் செய்து பிராமணரைத் தேடிக்காணமற் றிரும்பிவந்து சுந்தரமூர்த்திகளிடஞ் சொல்ல அவரும் எழுந்து நாற்புறமும் பார்க்கும்பொழுது சமைத்திருந்த உண வையுங் காணமலதிசயித்து இது பரமசிவனுடைய திருவிளையாட்டென்று மகிழ்ந்தார். சோதிவனத்தி லன்போடு என்னைக்காணது எங்குச்செல்ல நினைக் கின்றாயென்று ஆகாயவாக்கொன்று கேட்டது சுந் தரமூர்த்திகள் அவ்வொலிகேட்டு மரமடர்ந்த சோ திவனத்திற்கு இக்கூட்டத்தோடும் எவ்வாறு செல் வோமென்று யோசிக்கையில் இடபவாகனத்தின்மீது ஏறிக்கொண்டு நாம் முன்னேசெல்கின்றோம். நீ அவ் விடபத்தின் அடிச்சுவட்டைநோக்கி வரலாமென்றரு ளிய திருவாக்கைக்கேட்டு மகிழ்ந்து சிவபெருமான் பின்னேயாவருஞ் செல்லும்பொழுது அடிச்சுவடு கா ணமல் மயங்கிக்காட்டில் வழியறியாது நின்று சுந்தர மூர்த்திகள் சிவபெருமானை யன்போடுதுதிக்க இடபத் தடியைநோக்கி வருவாயென்று மறுபடியுங்கூற அவர் கள் சிலதூரஞ்சென்றவுடன் எங்கும் இலிங்கமாயிருக் கக்கண்டு அடிபெயர்க்கக் கூடாதென்று துன்புற்று

அச்சோதிவனத்தின் வளங்களையெல்லாம பார்த்துக் கொண்டு அங்குள்ள ஓர்வழியிற்சென்று சிவபெருமா னுடைய விமானத்தைக் கண்டார்கள். மகிழ்வோடு மடியர்கூட்டத்தோடு நீராடிக் காளீசரைத்தரிசிக்கப் போம்பொழுது சிவபெருமானருளால் அவ்வாலயமிந் தோன்றுது மறைந்துவிடச் சுந்தரமூர்த்திகள் பார்த் துக் காளீசரைத் துதித்தோமல்லோம். அதனுலிவ்வா ருயிற்றென்று ஓர் தேவாரப்பாசுரமிசைத்துத் துதித் தார். உடனே ஒரொளி காணப்பட்டது. மறுபடியுந் துதிக்கத் துதிக்க ஆலயமுழுமையுங்காட்டிக் காளீசர் மகிழ்ந்து அச்சுந்தரமூர்த்திகளுடைய அன்புயாவர்க் குந் தோன்றும்படி காண்பித்து அவர்க்குக்காட்சிகொ டுத்து அளவற்ற பொன்னும் பரிசுகொடுத்தருள அடி யார் கூட்டத்தோடு சுந்தரமூர்த்திகள் அவ்விடம் விட்டுப் பலதலங்களிலும் பரமசிவனைப் பாடிக்கொ ண்டு சென்றுர் ஆதலாற் குண்டாற்றங்கரையில் சுந் தரமூர்த்திகளிடம்வந்த காளீசர் அம்மையோடு இன் னும் அப்பதியில் வாழ்கின்றுர் ஆதலாற் காளீச ருடைய மகிமையைக்கூறுபவர் யாரென்று சுமந்து முனிவர் கூறினர்.

சுந்தரமூர்த்திப்படலம் முற்றிற்று.

## உஎ-வது. தேவராதப்படலம்.

சுந்தரமூர்த்திகள் சரித்திரத்தை மொழிந்தோம் இனித்தேவராதர் சரித்திரத்தைக் கூறுகின்றோம்.

கேளுங்கள் சௌனகாதி முனிவர்களேயென்று சூத்புராணிகர் சொல்லத்தொடங்கினர்."

கிழக்குக்கடற்கு மேற்குத் திருவாடானைக்கு வடகிழக்கு திருப்புனவாயிலுக்குத் தென்மேற்கு இந்திரபுரமென்று ஒரூருண்டு. அந்நகரத்தில் வேதங்கண் முழுவதுமறிந்தவருஞ் சோமயாகஞ்செய்தவரும் பூதிசாதனங்களைக் கொண்டவருமாகிய தேவராதனென்று பெயரையுடைய ஒருபிராமண ரிருந்தார். அத்தேவராதருக்கு இரண்டு புத்திரர்களுண்டு மூத்தபுத்திரனுக்கு உபநயநஞ்செய்து வித்தியாப்பியாசஞ் செய்வித்துக் கங்காயாத்திரைசெல்லக் கருதி மூத்தபுத்திரனைவிநதனைக் காளீபுரத்தில் மாமன்வீட்டில் வைத்துவிட்டு இளையமைந்தனை யழைத்துக் கொண்டு மனைவியோடு காசிக்குச்சென்றார். அப்பிராமணர் காசிக்குச்சென்றபிறகு இந்திரபுரத்து மகாசனங்கள் அவருடைய பொருள்களையெல்லாம் அபகரித்துக் கொண்டார்கள். விநதனனவன் அம்மானாகிய பிரியமுள்ள காந்தனென்பவனுடைய சவரக்ஷணையிலிருந்தான். அப்போது காந்தனென்பவன் மருமானுடைய பருவத்தைநோக்கி விவாகஞ்செய்யக் கருதி மருமானோடு இந்திரபுரத்துக்குச்சென்று அங்குள்ள மகாசனங்களைக்கண்டு தேவராதர் வாரணாசிக்குச் சென்றார். நெடுநாளாயும் வராமையால் அவர்புத்திரனுக்கு விவாகஞ்செய்யக்கருதிப் பொருள் வேண்டியிருப்பதா லிவ்விடம் வந்தேன். அவரது நிலத்தை

யாவர் அனுபவிக்கின்றார்? அதின்வருவாயைக் கணக்கிட்டுக் கொடுங்களென்றுகேட்க மகாசனங்கள் யாவருங்கூடி அவர்சென்றபிறகு அவர் பங்குக்கு வரிசெலுத்துவதற்காக அவர் சொத்துமுழுதும் விற்றுத்தீர்ந்துவிட்ட தென்றார்கள். காந்தன்கேட்டு அவர்களுக்கு இன்சொற்கூறிச் சென்றவருடைய புத்திரன் உங்கள் புத்திரன் நீங்கள் இப்படிச்சொல்வது ஞாயமன்றென்று பலவாறு இரக்கவும் அவர்களிணங்காமற் கொடுஞ்சொற்கூறித் துரத்திவிட்டார்கள்.

காந்தன் மனம்வருந்தி நீதியில்லையோ கேட்க நாட்டில் மனிதர்களில்லையோ, அரசரில்லையோ வென்று கூவிவிட்டுக் காளிபுரத்தை யடைந்தான். அப்படியிருக்கையில் காந்தனும் இறந்தான் விநதனுக்கு ஓர் துணையுமின்றி அன்னத்துக்கில்லாமல் மனமறுகிக் காளீசர் திருவடிகளைத் தினமும் பணிந்து பிரமசாரி விரதம் தவறாதவனாய்க் கிரகந்தோறும் பிச்சைவாங்கிச் சீவனஞ்செய்துகொண் டிருக்கையில் அருட்கடலாகிய காளீசர், தான் தேவராதனும் அம்பிகை அவர் மனைவியும் சுப்பிரமணியர் அவரிளையபிள்ளையுமாய்த் திருவேடம்பூண்டு தலைச்சுமையைத் தோளிற்றாங்கி யுச்சியாற்றிக்கொண்டு சிங்கைக்காவடியையுந் தூக்கிக்கொண்டு காசியிலிருந்து வருபவர்போல் மைந்தனிடம்வந்து அவனைத் தழுவிக்கொண்டு அங்குள்ளவர்களெல்லா மறியும்படி அவ்விடத்துச் சில நாளிருந்து பின்பு விநதனையு மழைத்துக்கொண்டு

இந்திரபுரத்துக்குச் சென்றார். அவ்வூரிலுள்ளவர்கள் கண்டு மனங்கலங்கியும் அதைவெளியிடாமல் முக நட்பாய் உபசரித்தார்கள். மறுநாள் ஊரிலுள்ளவர்க ளைப்பார்த்து நான் காசிக்குச் சென்றதுமுதல் இது வரை எனது பங்கில் எவ்வளவு கிடைத்தது அதில் வரிச்செலவுபோகப் பாக்கியைக் கணக்கிட்டுக் கொடு ங்கள். எனது மூத்தபுத்திரனுக்கு விவாகஞ்செய்தல் வேண்டுமென்று கேட்க மகாசனங்கள்கேட்டு நீர் கங் கைக்குப்போவதற்காக முன்னமே யும்முடைய நிலங் களையெல்லாம் விற்றுவிட்டீரே இப்போது உமக்கு வருவாயேது? யாவர் கொடுப்பார்கள்? பித்தங்கொண் டீரோ வென்று அவர்கள் கூறக் காளீசராகிய தேவ ராதர் நான் பித்தன்றுன் என்கையெழுத்திருந்தால் எடுங்களென்றார். மகாசனங்கள் நல்லதென்று பொய்ச் சாதனங்கள் எழுதிக் கொண்டுவந்து காட்டத் தேவ ராதர் இதினுண்மையைத் தெளிவதற்காக அரசனி டம் செல்லுவோமென்று கோபித்துத் தேவிகோட் டையில் வாழுகின்ற சைவபத்தனாகிய குலபூடண பாண்டியனிடஞ்செல்ல அரசன் கண்டு இவர்யாரோ அருந்தவர்போ லிருக்கின்றாரென்று பயபத்தியோடு வணங்கி யுபசரித்துத் தேவரீர் வந்தவாறென்னெனக் கேட்க நடந்த வர்த்தமானங்களையெல்லாங்கூற அவ் வரசன் இப்பொழுதே அக்கொடியவர்களை யெல் லாங் கொண்டுவாருங்களென்று கட்டளையிட உடனே அம்மகாசனங்கள் கூட்டமாய்வந்து அவர்கள் காட் டிய சாட்சியும் சாதனங்களும் பொய்யென்று அரச

'னறிந்து இந்திரபுரத்தில் அவர்களுக்குப் பாத்திய
மான எல்லாப்பொருள்களையும் தேவராதருக்கே சொ
ந்தமாக்கும்படி கட்டளையிட அப்படியே அவருக்குச்
சொந்தமாக்கினார்கள். பின்பு தேவராதராகிய காளீசர்
விரதனுக்குத் தன்குலத்தில் நல்ல கன்னிகையைத்
தேடி விவாகஞ் செய்யும்பொழுது முன்னைய தேவ
ராதர் புத்திரனோடும் மனைவியோடும் தற்செயலாய்
வர அங்குள்ளவரெல்லாங் கண்டு அதிசயித்தார்கள்.
உடனே சொர்ணவல்லியும் சுப்பிரமணியரும் காளீச
ரும் ஒளித்தருளினார்கள். தேவராதரும் நடந்த செய்
கைகளையெல்லாம் அங்குள்ளவர்கள் புகலக்கேட்டுத்
தினந்தோறுங் காளீசருடைய பாதாரவிந்தங்களைத்
துதித்து வாழ்ந்தார்கள். ஆதலால் இந்திரபுரத்தில்
காளீசரும் சுவர்ணவல்லியும் வீற்றிருக்கின்றனர். அவ
ரால் மீட்கப்பட்டதாகிய அவ்வூர்க்கு அழகிய மங்கல
மென்று இன்னும் உலகமெங்கும்புகழும் என்று
சுமந்துமுனிவர் கூறினார்.

தேவராதப்படலம் முற்றிற்று.

---

## உஅ-வது.தலவிசேடப்படலம்.

---

தேவராதன் சரித்திரத்தை மொழிந்தோம். இனித்
தலவிசேடத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் சௌ
னகாதி முனிவர்களே யென்று சூதபுராணிகர் சொல்
லத் தொடங்கினார்.

மேருமலை காசி சிதம்பரம் மதுரை அருணைசலம் திருவாரூர் திருவாலங்காடு வேளூர் திருவிடைமருதூர் திருவையாறு மாயூரம் சீகாழி திருக்குற்றாலம் திருக்காரோணம் ஸ்ரீசைலம் திருச்சிராப்பள்ளி திருவானைக்கா முதலிய பற்பல தலங்களிலுஞ் சிறந்து விளங்குகின்ற காளிபுரமொன்றே சிவபெருமானுக்கு முக்கிய தலமென்பார்கள். பத்தியும் பாவங்கணீக்கமும் சித்தசுத்தியும் முத்தியும் வேண்டினவர் இத்தலத்தில் ஓர்நாளிருப்பினடைவர் என்றால் இத்தலத்திற் கிணையென மற்றொருதலத்தைச் சொல்லலாகுமோ எந்த வருணத்தாராயினும் எவ்வகைப்பட்ட செந்துக்க ளாயினும் அத்தலத்திலோர்மாத மிருப்பில் அளவில்லாத வின்பத்தையும் முத்தியையு மடைவார்கள். ஒருபக்ஷ மிருப்பாராயிற் பாதகங்க ளனைத்து நீங்கும். அத்தலத்தில் ஒருவார மிருந்தால் கொடிய அதிபாதகங்க ளெல்லாநீங்கும். மூன்று நாளிருந்தால் சமபாதகநீங்கும். இரண்டுநாளிருந்தாற் சங்கிலிகரண நீங்கும். ஒருநாளிருந்தாற் சாதிப்பிரமசம் போகும். ஏழுமுகூர்த்த மிருந்தால் அபாத்திரிகரணம் போகும். மூன்று முகூர்த்தமிருந்தால் சங்கீரணம்நீங்கும். கிரகண புண்ணியகாலத்தில் அத்தலத்தி லிருந்தாற் சனனநீங்கிக் கைலையையடைவார்கள். அத்தலத்தில் அமாவாசையில் ஒருவற்கு அன்னமிட்டால் கைலையை யடைவார். ஏகாதசருத்திரம் சந்நிதியிலிருந்து செபித்தால் நினைத்தன வெல்லாங் கைகூடும். அத்தலத்தில் பிதிர்சிராத்தஞ் செய்

வாராயின் கயையிற்செய்த பலமுண்டாம். சோம வாரத்திரவில் ஒரு சிவபத்தர்க்காயினுஞ் சந்நியாசிக் காயினும் அன்னமிட்டால் கைலையை யடைவர். தரு மஞ் செய்பவர்கள் அத்தலத்திற் செய்வாராயில் ஒன்று பலவாயிரங்களாம். அன்றியும் ஒருவர்க் கன்னமிட் டால் பதினாயிரம்பேர்க் கன்னமிட்டதற் கொப்பா கும். பூலோகத்திற் பிறந்தவர்கள் யாவராயினும் ஒரு நிமிடமாவது அத்தலத்தில் வசிப்பாராயின் சீவன் முத்தராய் உலகெங்கும் வணங்கும்படி வாழ்வார் கள். அன்பில்லாதவனானாலுஞ் சற்றேனு மறிவில் லாதவனானாலும் வேசையின்பத்தைக் கருதியாயினும் எந்தக்காரணத்தினாலானாலும் ஒருநாளாவது அத் தலத்தில் வசிப்பாராயின் அப்படிப்பட்டவர்கள் நர கத்துன்பத்தினின்றும் நீங்கிப் பேரின்பத்தை யடை வார்கள். பலபாவங்களையும் அறிந்து செய்கிற சண்டா ளராயினும் முன்னைத்தவத்தினால் ஓர்நாளாயினும் அத்தலத்தி லுறைவாராயின் பாவங்களனைத்து நீங்கி நற்கதி சேர்வார். அங்கிருந்து அருந்தவஞ் செய்வாரா யின் அதனைச் சொல்லக்கூடுமோ ஒருவன் காளிபுரத் திற் கொப்பென்று மற்றொரு தலத்தைக் கூறினாலும் காளீசர்க் கொப்பென்று மற்றொரு தெய்வத்தைக் கூறினாலும் அவன் நீசனாவான். ஊழ்வினை வசத்தி னாற் பிணியடைந்தாலும் வறுமைநோயால் வருந்தி னாலுங் காளீசர் சந்நிதியை யடைவாராயிற் சஞ்சலம் யாவுநீங்கிப் பேரானந்தத்தை யடைவார்கள். சோதி வனத்தின் எல்லைக்குள் வசிப்போர்கள் யாராயினும்

ஊழ்வினைகள் யாவுநீங்கிப் பரிசுத்தராய் முத்தரா வார்கள். அத்தலத்தின் மேன்மையைச் சொல்ல வல் லவர்யாவர் என்று சுமந்துமுனிவர் கூறினர்.

தலவிசேடப்படலம் முற்றிற்று.

---

## உ௯ - வது. முனிவர்பூசித்தபடலம்.

---

இத்தன்மையையுடைய கைலாசபதி யானவர் காளீ சராய் வீற்றிருந் தருளுகின்ற காளிபுரத்தின் மான்மி யத்தை இவ்விதமாய்ச் சூதமுனிவர் கூறத்தவமுனி வர்கள் யாவருங்கேட்டு மனங்களித்து அத்தலத்தைத் தரிசிக்க ஆகாயமார்க்கமாய்ச் சென்று சோதிவனத் தைக்கண்டு காளிபுரத்தை யடைந்து புண்ணிய தீர்த் தத்தில் விதிப்படி மூழ்கினார்கள். விபூதி யுருத்திராக் கந்தரித்து வாண்மேனடந்த வம்மையையுந்தரிசித்துக் காளீசர் சந்நிதி மண்டபத்தில் வீற்றிருக்கின்ற மறை யோர்களையுந் தரிசித்து விநாயகர் நந்தி முதலியவர்க ளைப் பணிந்து சிவதரிசனத்துக்கு வேண்டியவைகளை யெல்லாங் கைக்கொண்டு காளீசரையுஞ் சோமேச ரையு மபிடேகஞ்செய்து ஆயிர நாமங்களா லர்ச்சனை செய்வித்துச் சந்நிதியினின்று வேத வாக்கியங்களா லுளமுருகித் துதிக்கும்போது காளீசரானவர் ஒளி யாய்த்தோன்றி முனிவர்களே உங்கட்கு வேண்டும் வரமளிப்போம் என்று கூறியருள யாங்கள் பவக்க

டல்கடந்து உமது பாதாரவிந்தத்தை யடைவதே வேண்டுமென்று கூறக் காளீசர் மகிழ்ந்து நமது சரித்திர முழுமையுங் கேட்டு அன்போடு நம்மையுந்துதித்தீர்கள். பத்தியில்லாதவராயினும் ஞானமில்லாராயினும் இத்தலத்தை யடைவாராயின் அவர்க்கும் மூத்தியளிப்போ மென்றால் உங்கட்குச் சொல்லவேண்டுமோ சத்தியமாகவே இத்தலத்தை யடைந்தவரை விட்டு யானகலேன் என்றருளினர். முனிவர்கள் யாவருங் கேட்டுக் காளீசருடைய பாதங்களில் வணங்கிப் பஞ்சாக்கரத்தை மனத்திலெண்ணி அம்முனிவர்கள் அன்றுமுதல் அத்தலத்திற்றங்கி ஆநந்தக் கடலுண்மூழ்கிச் சிவபதத்தையுற்று வாழ்ந்தார்கள்.

முனிவர்பூசித்தபடல முற்றிற்று.

---

பிரமகைவர்த்த புராணத்திற் சொல்லிய

காளையார்கோயிற் புராணவசனம்

முற்றிற்று.

---

சிவமயம்.

## கந்தபுராணத்தில் சங்காசங்கிதையில்

# க்ஷேத்திர கண்டத்திலுள்ள கதை.

## க-வது. அத்தியாயம்.

---

நைமிசாரணிய வாசியாகிய சௌனகமுனிவர் சூத புராணிகரை "வணங்கிச் சோதிவனத்தின் மான்மியத்தை இன்னும் உரைத்தருள வேண்டுமென்று கேட்கச் சூதபுராணிகர் ஒருமுகூர்த்தம் வரையிற் சிவபெருமானைத் தியானித்துச் சௌனகரைப் பார்த்துக் காந்தபுராணத்தில் சங்கரசங்கிதையி லுள்ள மான்மியமும் சொல்லத் தொடங்கினர்.

சிறப்புற்றோங்கிய கைலாயகிரியி னுச்சியில் இரத்தின சிங்காதனத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானை அம்பிகை வணங்கி ஓநாதனே சோதிவனமென்பது உலகத்திலுள்ள தலங்க ளெல்லாவற்றிலுஞ் சிறந்ததென்று தேவரீரால் சுருக்கமாய்க் கேட்டிருக்கின்றேன். அதின் மான்மியங்களை விரித்துரைக்க வேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபெருமான் சொல்லத் தொடங்கினர். பற்பலவளம் பொருந்திய சோதிவனத்தில் விளங்குகின்ற வேதாந்தத்தினாற் பரப்பிரமமென்று கூறப்பட்ட இலிங்கத்தினின்று சதாசிவரும்

அவரிடத்திலிருந்து நாமும் எம்மிடத்திலிருந்து உருத்திரரும் அவரிடத்திலிருந்து விஷ்ணுவும் அவரிடத்திற் பிரமாவும் அவரால் உலகங்களும் உண்டாயின. அந்த இலிங்கத்தின் சோதியால் அவ்வனமுழுதும் விளங்குவதாற் சோதிவன மென்று பெயர் என்று சிவபெருமான் உமையவளுக் குரைத்தருள அவர் மடியிலிருந்த சுப்பிரமணியர் கேட்டு அகத்தியர் முதலிய இருடிகளுக்குச் சொல்ல அகத்தியமுனிவர் சரவணபவனை வணங்கிச் சோதிவனத் தலத்தையடைந்து அருந்தவம் புரியும்பொழுது சிவபெருமான் பெருஞ்சோதி வடிவாய்த் தோன்றி அகத்தியனை நோக்கி உன்னினை வென்னென அகத்தியமுனிவர் சிவபெருமானை நோக்கி இந்த உருவம் என்போலியர்களுக்குத் தரிசிக்கத் தக்கதாயும் மற்றவர்களுக்குத் தரிசிக்கக் கூடாததாயு மிருப்பதால் சகல பிராணிகளுக்கும் தரிசிக்கத்தக்கதானவுருவத்தைக் காண்பித்து உம்மைப் பூசிக்கும் விதியை உபதேசித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கும்பொழுது, படிகமயமான சதாசிவவடிவங்கொண்டு அகத்தியர் முதலிய இருடிகளுக்குப் பூசாவிதியை உபதேசித் தருளினர். அதைப்பார்த்திருந்த பராசக்தியானவள் சிவபெருமானை யன்புடன் வணங்கி நாமரூபமில்லாத பிரமசுவரூபமாகியவுமக்கு இவ்வடிவ மேதென்று வினவச் சிவபெருமான் நிர்மலமான ஆகாயத்தில் மேகமானது தோன்றியுந் தோன்றாதிருப்பதுபோல உருவமாயும் அருவமாயும் விளங்குவோம். ஆதாரமில்லாத ஆகா

யத்திற் புகை அக்கினி ஒலி முதலியவைக ளுண்டா வனபோல ஆதாரமில்லாதவெம்மிடத்தில் இச்சா மாத்திரத்தால் பஞ்சகிருத்தியங்க ளுண்டாகின்றன. எப்பொழுது எனது கண்கள் மூடியிருக்குமோ அப் பொழுது பிரளயகாலமென்றும் எனது கண்கள் விழித்திருக்குங்காலம் சிருட்டிகாலமென்றும் கூறு வார்கள். இருளிலுள்ள பொருள்கள் தீபத்திஞற் பிர காசிப்பனபோல மாயையிஞற் சகலகிருத்தியங்களை யும் எல்லாருடைய சித்தத்திலும் காட்டுவோம் என் றுகூறத் தேவியானவள் அதனைச் சோதிப்போமெ ன்று தன்னுடைய கைகளிஞற் சிவபெருமானுடைய கண்களைப் புதைத்தாள். உடனே உலகமெல்லாம் இரு ளடைந்தது. அதைப்பார்த்துப்பயந்து கைகளை எடுத் தவுடன் முன்போலத்தோன்றின. உடனே பரமசிவ ன் அம்பிகையைப் பார்த்துச் சகலபுவனங்களையும் இருள்மூடும்படி செய்ததால் ரௌத்திர வடிவான காளியாய்ப் பூவுலகத்திற்சென்று துட்டர்களான அசு ரர்களை நாசஞ்செய்வாயென்று கூறிய சாபத்தைக் கேட்டு நடுங்கிப் பரமசிவனைத் துதித்து உம்மை விட் டுப்பிரிந்து அரைக்கணமேனுந்தரியேன் என் குற் றத்தைப்பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தி கச் சிவபெருமான் மகிழ்ந்து சோதிவனத்தை யடைந் து தவஞ்செய்வாயாயின் அங்குள்ள இலிங்கத்தினின் று தோன்றி யுனது சாபத்தை நீக்குவோமென்று கூறிச் சிவபெருமான் மறைந்தருளிஞர்.

உடனே அம்பிகையுங் காளியுருவத்தை யடைந்து பூதகணங்களையும் பிசாசங்களையுந் தனக்குப் படையாகச் சேர்த்துக்கொண்டு சண்டாசுரன் முதலிய அசுரர்களைச் சங்கரித்துச் சோதிவனத்தில் வரும்போது தாலகுக்குமங்களாகிய இரண்டு இலிங்கங்களையுங் கண்டு தன்பெயரால் ஒரு தீர்த்தமுண்டாக்கி அதில் மூழ்கி அவ்விலிங்கங்களைப் பூசிக்கையிற் சாபநீங்கிக் கௌரியென்றும் உமையென்றுமிரண்டு வடிவங்கொண்டு பரமசிவனைத் துதிக்கையில் அச்சிவபெருமான் உமையவளுக்குப் பிரசன்னமாகி உனக்குவேண்டுவதென்னவென்று கேட்க உம்மைப்பிரியாத வரந்தரவேண்டு மென்று கூற அப்படியே இலிங்கத்துள் ஐக்கியஞ்செய்துகொண்டாள். கௌரியு மிரண்டிலிங்கத்தையும் பூசித்துத் துதிக்கையிற் சிவபெருமான் பிரசன்னமாகி உனக்கு வேண்டுவதென்னென, என்னை விவாகஞ்செய்தருளும் என்றுவேண்ட அப்படியே மணம்புரிந்து சோதிமயமான இலிங்கத்தில் ஐக்கியஞ் செய்துகொண்டார். அதினுல் காளீசரென்றுஞ் சோமேசரென்றும் தருணேசரென்றும அவ்விலிங்கங்களுக்குப் பெயராயின. அம்பிகைக்கு சுவர்ணவல்லி என்றும் சௌந்தரநாயகி யென்றும் பெயராயின. இதைப்பார்த்திருந்த அகத்தியமுனிவர் அவ்விலிங்கங்களின் தென்கிழக்கில் தன்பெயரால் ஒருதடாகத்தையுண்டாக்கி யதில்மூழ்கி ய்வ்விரண்டிலிங்கத்தையும் பூசித்துக்கொண்டிருந்தார். என்று சூதபுராணிகர் கூறினர்.

முதல் அத்தியாய மூற்றிற்று.

## உ - வது. அத்தியாயம்.

சௌநகரைநோக்கிச் சூதபுராணிகர்சொல்லுகின்றார்.

முற்காலத்திற் பிரமா விஷ்ணு உருத்திரரின்மூவ ரும் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத் தொழில்களிலுந் தாங்களே சாமர்த்திய முடையவர் களென்று கருவித்ததினால் ஒவ்வொருவற்குந் தத் தந்தொழில்செய்யச் சத்தியற்றவர்களாய் ஒன்றுசே ர்ந்து சிவபெருமானிடஞ்சென்று தங்கள் குறையை ச்சொல்லிப் பிரார்த்திக்கச் சிவபெருமான் ஓ திரி மூர்த்திகளே. உலகங்களுக்கும் உங்களுக்கும் எனக் கு முதற்காரணம் பிரமமே. அதன் சத்தியினாற்றான் எல்லாம் நடக்கின்றதென்பதை யறியாமற் கருவித் தபடியா லுங்கட்குத்தொழிலியற்றச் சத்தியில்லாமற் போயிற்று. நீங்கள் பூலோகத்திற் சோதிவனத்தின் கணுள்ள தூலசூக்கும இலிங்கங்களிரண்டையும் பூசிப்பீராயின் உங்கட்கு முன்போலச் சத்தியுண்டா கும், அவ்விலிங்கங்களைத் தியானியுங்களென்று கூற அவர்களும் அப்படியே தியானித்து அவ்விலிங்கங் களை மனக்கண்ணினாற் கண்டானந்தமடைந்து அம் மூவரும் சோதிவனத்தை யடைந்து அவ்விலிங்கங் களைக் கண்களாலுந் தரிசித்துத் தங்கள் தங்கள் பே ரால் ஒவ்வொரு தீர்த்தத்தையுண்டாக்கி அவைகளின் மூழ்கி விதிப்படி பூசித்துத் துதிக்கும்போது, சிவ பெருமா னருள்வடிவாய்த் தோன்றித் திரிமூர்த்திக

...உங்கட்கு முத்தொழிலு மியற்றச் சத்தியுண்டாகும். நீங்கள் வேண்டிய வரங்களைக் கேளுங்களென்று கூற உருத்திரன் பணிந்து என்னாலுண்டாக்கப்படும் தீர்த்தத்தில் மூழ்கினவர்க்கு அவர்கள் நினைத்தனவெல்லா நிறைவேற வரந்தரவேண்டுமென்று கூறச் சிவபெருமான் அப்படியே யாகுகவென்று வரமளித்தார். மற்ற இருவர்களும் அப்படியே பிரார்த்தித்துக் கொள்ளச் சிவபெருமான் அவ்வரமளித்து இலிங்கத்தில் மறைந்தார். மூவருந் தந்தமிடங்களிற் சென்றார்கள் என்று சூதபுராணிகர் மொழிந்தார்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௩ - வது. அத்தியாயம்.

சௌநகரைப் பார்த்துச் சூதபுராணிகர் சொல்லுகின்றார்.

முற்காலத்திற் றேவேந்திரசபையில் நடனஞ் செய்துகொண்டிருந்த அரம்பையானவள் காரணமின்றிச் சிரித்ததினால் தேவேந்திரன் கோபமடைந்து பூலோகத்தில்தேவதாசியாய்ப் போகக்கடவையென்று சபிக்க அவள்பயந்து தேவேந்திரனை வணங்கி அடிமையாகிய எனக்கு விமோசனங் கூறவேண்டு மென்று பிரார்த்திக்கத் தேவேந்திரன் மகிழ்ந்து அரம்பையே பாண்டியதேசத்தில் ஆலாசியமென்று ஒரு புண்ணிய தலமிருக்கின்றது அதின்கிழக்கில் மூன்றுயோசனை

யிலுள்ள சோதிவனத்தில் பரமசிவனால் சபிக்கப் பட்ட பிரமதேவர் பூசித்த விரிஞ்சிநகரமென்று பேர் பெற்ற அழகான ஒருதல மிருக்கின்றது. அதில் புரா தனமாயுள்ள சோமேசர் காளீசரென்று இரண்டி லிங்கங்களிருக்கின்றன. அதற்கு அக்கினிதிக்கில் சகல பாபத்தையும் போக்கத்தக்க யானைமடுவென் னும் புண்ணிய தீர்த்தமிருக்கின்றது. அதில் மூழ்கி னால் சாபநீங்குமென்று சொன்னான்.

அரம்பை கல்யாணபுரமென்னுங் கிராமத்தில் தாசி யாய்ப்பிறந்து வெகுசனங்களிடத்தில் வேண்டிய திர வியங்களைச் சம்பாதித்துக் கொண்டு நாள்தோறும் ஏழைகளுக்குத் தானங்களைக் கொடுத்துக்கொண்டி ருந்தாள். இப்படியிருக்கையில் காளிபுரத்தில் தைப் பூச உற்சவம் வந்தது. அப்போது காளீசரைத்தரி சிக்கக் காளிபுரத்திற்குவந்து யானைமடுவில் மூழ்கிக் காளீசரைத் தரிசித்தமாத்திரத்தில் சாபநீங்கித் தே வலோகஞ்சென்றாள். ஆதலால் இந்த யானைமடுவில் மூழ்கினால் பிரமகத்தி முதலிய சகலபாபங்களு நீங் கும் என்று சூதபுராணிகர் சொன்னார்.

மூன்றாவது அத்தியாய முற்றிற்று.

## ௪-வது அத்தியாயம்.

சூத புராணிகரைப் பார்த்துச் சௌனகர் சிவ பெருமான் என்ன காரணத்தினால் பிரமதேவரைச்

[illegible]ர் அதை விரித்துரைக்க வேண்டு மென்று கேட்கச் சூதபுராணிகர் சொல்லுகின்றார்.

கைலேயிற் பரமசிவனுடைய திருவோலக்கத்தில் முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணு யிர முனிவர்களும் சித்தர் உரகர் கந்திருவர் மகோ சகர் இயக்கர் சாத்தியர் வித்தியாதரர் தும்புரு நார தர் முதலிய அனைவரும் நந்திதேவரின் அநுக்கிரகம் பெற்று உமாசமேதராகிய சிவபெருமானை வணங் கித் துதித்து நிற்கையில் கந்திருவர் பாடவும் அரம் பையர் நடனமாடவு மனைவரும் பார்த்துக் கொண்டி ருந்தார்கள். அப்போது அதிகக்காற்று வீசியபடியால், ஊர்வசியின் வத்திரம் விலக அவள் துடைகளிரண்டுந் தெரிந்தன அவற்றைப் பிரமதேவர் பார்த்து மோகம டைந்தார். பரமசிவன் பிரமாவைப்பார்த்துக் கோபி த்து நீ நமது சந்நிதியிலே மோகமடைந்த படியால் இப்பாவநீங்கக் கருமபூமியிலே வையைக்கு வடபக் கத்தில் சோமேசுவரமென்று ஒருதல மிருக்கின்றது அதற்கு யோசனைதூரத்தில் தேவதாருவனமென்கிற தலத்தில் காளீசர் சோமேசரென்று இரண்டு இலிங் கங்க ளிருக்கின்றன அவற்றிற்குத்தென்பக்கத்திலிருக் கும் யானைமடுவில் ஐந்து தீர்த்தங்க ளிருக்கின்றன அவற்றில் மூழ்கி விதிப்படி பூசிப்பாயாகில் நான் உனக்குப் பிரத்தியட்சமாகிறேன் என்று சிவபெரு மான் ஆக்கியாபித்தார்.

பிரமதேவரும் பரிவாரத்துடன் சோதிவனத்தை யடைந்து இலிங்கத்துக்குத் தென்கிழக்கிலுள்ள தேவிதீர்த்தத்தில் மூழ்கிச் சிவபெருமானைப் பூசித்தார். அம்பிகையைக்காணமற் றேடும்பொழுது ஒரு ஆகாய வாக்குண்டாயிற்று பிரமனே முற்காலத்திற் றேவி பூசித்துப் பின்பு விட்டுணு பூசித்துப் பின்பு வெகு காலமாய்ப் பூசையில்லாமையாலும் சனசஞ்சார மில்லாமையாலும அம்பிகை புதர்களால் மூடப்பட்டிருக்கின்றாள். நீயதை வெளிப்படுத்திப் பூசிப்பாயாயிற் சிவாபராத நீங்குமென்று சொல்லிய ஆகாயவாக்கைக் கேட்டுத் தன் தண்டாயுதத்தால் சோதித்து அம்பிகையைக் கண்டு பூசித்துத் துதித்தார். இப்படிச் சில காலம் பூசிக்குங்காலத்தில் திருமால் ஒரு முனிவர் வேடம்பூண்டு அநேக முனிவர்களுடன் வரப் பிரமதேவர்கண்டு மகிழ்ந்தார். அவ்விருவரும் சிலகாலம் அவ்விடத் திருந்தார்கள். அப்போது பிரமதேவர் விசுவகர்மாவை யழைப்பித்து ஐந்து பிராகாரங்களும் கோபுரங்களும் விமானங்களும் சபாபதி விநாயகர் முதலிய விக்கிரகங்களும் நவரத்தினங்களா லிழைக்கப்பட்ட அநேக ஆபரணங்களும் செய்வித்துப் பிறகு பஞ்சாக்கினி மத்தியிலிருந்தும் வாயுவைப்பட்சித்தும் இந்திரியங்களையுஞ் சுவாசத்தையு மடக்கியும் சிவபெருமானைத் தியானித்துப் பூசிக்கும்போது சிவபெருமான் உமாதேவி சகிதரா யிடபவாகனத்திற் றோன்றினார். பிரமதேவர் கண்டு பணிந்து துதித்து யான்செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்

இந்தத் தலம் என்னுடைய பெயரால் விளங்கவேண்டும் இத்தலத்தில் வசிப்பவருடைய அபராதத்தையும் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபெருமான் அப்படியே பிரமாவுக்கு அனுக்கிரகித்துச் சத்தியலோகத்துக்கு விடைகொடுத் தருளினார். இத்தலத்திற்கு கிருதயுகத்தில் தேவதாருவனமென்றும் திரேதாயுகத்தில் இலக்குமிபுர மென்றும் துவாபரயுகத்தில் பிரமபுரியென்றும் கலியுகத்தில் பிதுர் மோட்சபுர மென்றும் அகத்தியர் பூசித்தபடியால் அகத்தியக்ஷேத்திரமென்றும் பெயராம். என்று சூதபுராணிகர் மொழிந்தார்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ரு - வது அத்தியாயம்.

சௌனகர் சூதபுராணிகரைப் பார்த்து இத்தலத்திற்கு இலக்குமிபுரமென்றும் பிதிர்மோட்சபுர மென்றும் பேர்வந்த காரணத்தை விரித்துரைக்க வேண்டுமென்று கேட்கச் சூதபுராணிகர் சொல்லுகின்றார்.

ஒரு காலத்தில் மகா தபசிகளாகிய வாலகில்லியர் ஒரு யாகஞ் செய்தற்பொருட்டு விட்டுணுவை யழைப்பதற்கு வைகுண்டத்திற்குப் போனார்கள். அப்போது வைகுண்டக் காவலாளிகளான சயவிசயர்களிருவருங்கண்டு அவர்களுடைய வரவை விஷ்ணுவுக்கறிவிக்க உட்சென்றார்கள்; அப்பொழுது அவர்

கள் வெகு குறளர்களாயும் குரூபிகளாயு மிருப்பதை இலக்குமிகண்டு சிரித்தாள். உடனே அவர்களுக்குக் கோபம்வந்து எல்லாரும் விஷ்ணுவையுங்கூடக் காணாமல் திரும்பிச் செல்வதை விஷ்ணுவறிந்து இலக்குமியைக் கோபித்து நீ இவ்விடம்விட்டு நீங்கென்று சொல்லிவிட்டு வாலகில்லியருக்கு எதிரில் சென்று அவர்களைத் துதித்து அவர்கள் கோபத்தை மாற்றி உங்களைக் கண்டு நகைத்த இலக்குமியையுந் தள்ளிவிட்டேனென்று சொல்ல அவர்கள் ஆகா நீர் இலக்குமியை விட்டுக் கணப்போது மிருக்கலாகாது அதற்கொரு கழுவாய் சொல்லுகின்றோம் பூலோகத்திற் பாண்டிநாட்டில் சோதிவனக்ஷேத்திரத்தை யடைந்து பன்னிரண்டாண்டு அதிலிருந்து சிவபெருமானைப் பூசைசெய்குக. பிறகு நீரும்போய்ப் பூசித்து அவளைச் சேர்த்துக்கொள்ளு மென்று கூற விஷ்ணுவானவர் அவர்கள்யாகத்தையும் நிறைவேற்றி வைகுண்டத்திற்குச்சென்றார். இலக்குமியும் பூலோகத்தில் சோதிவனத்தை யடைந்து பன்னிரண்டாண்டு பூசித்துத் தன் பெயரால் ஒரு தீர்த்தமு முண்டாக்கினாள். அப்போது விஷ்ணுவும் அத்தலத்திற்கு வந்து சிவபெருமானைப்பூசித்து யானைமடுவுக்குத் தென்புறத்தில் க்ஷேத்திரமான்மியத்தைப் புகழ்ந்துகொண்டு இன்னும் வசிக்கிறார்.

வைகாசிமாதம் பௌரணமியிலும் மாசி வைகாசி மாதங்களில் உதயத்துக்கு முன்னும் அத்தீர்த்தங்க

வில் நீராடினால் அவர்கள் சகல பாபமுநீங்கிச் சுவர்க்கத்தை யடைவார்கள்.

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

## சா - வது அத்தியாயம்.

சௌநகரைப்பார்த்துச் சூதர் சொல்லுகின்றார்.

கைலாயத்துக்கு வடபாகத்தில் ஈசுவரனுக்கு மித்திரனாகிய குபேரன் ஈசானருளால் திக்குப் பாலகனாகிப் பாலியந்தொடங்கிப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் நதிக்கரைகளிலும் சிவபூசை பண்ணிக்கொண்டுவந்தான். அவனொரு சமயத்தில் பரிசுத்தமான ஒரு நதிக்கரையில் நட்பர்களோடு புட்பக விமானத்திலேறிக்கொண்டு சஞ்சரிக்கையில் அந்நதியினழகைப் பார்த்து அதில் சிவபூசை செய்யக் கருதினான். அப்பொழுது ஆகாசவாக்கு ஒன்றுண்டாயிற்று. குபேரனே நீசெய்த புண்ணியத்தினாலும் பரமசிவனருளாலும் உனக்குப் பூசைசெய்ய மனமுண்டாயிருக்கின்றது. அதற்கு ஒரு தானம் சொல்லுகிறேன் வைகைக்கு வடக்கே ஒருயோசனை தூரத்தில் அநேகவிருக்ஷங்கள்சூழ்ந்த தேவதாருவன மொன்றிருக்கின்றது. அவ்வனத்திலுள்ள காளிபுரத்தில் சோமேச காளீசரென்கிற நாமமுள்ள இரண்டிலிங்கங்க ளிருக்கின்றன. முற்காலத்தில் அசுரர்களால் அபசயத்தை யடைந்த தேவர்கள் நீங்காத மனவருத்தத்துடன் தேவதாரு

வனஞ் சென்று சத்தியோடு சிவபெருமானைப் பூசித்துத் துதிக்கச் சிவபெருமான் பிரசன்னராகி அசுரரை வெல்லத்தக்க பராக்கிரமத்தை யளித்தருளினூர். தேவர்கள் சுபமடைந்தார்கள். அதுமுதல் அத்தலத்திற்கு விசயத்தைக் கொடுக்குமிடமாதலால் விசயபுரமென்றும்பெயராம். அதில் இருக்கின்ற இரண்டிலிங்கங்களையு மர்ச்சித்தால் நினைத்த வெல்லா முற்றுமென்று கூறிய அந்த அசரீரிவாக்கைக் கேட்டுக் குபேரனானவன் அந்தக்காளிபுரத்தை யடைந்து அதிலுள்ள பற்பல வளங்களை நோக்கும்போது அங்கு வசித்துக்கொண்டிருந்த இத்துமாவக ரென்னும் பெயரையுடைய முனிவரானவர் குபேரனைப்பார்த்து இவ்விடம் நீ வந்ததென்னெனக் குபேரன் நடந்த விர்த்தாந்தங்களை யறிவிக்க, அம்முனிவர் மகிழ்ந்து இவ்விடத்திலிருந்து பூசைசெய்யென்று சொல்லி யான் இவ்விலிங்கங்களைப் பூசித்ததினுல் எனக்கு அமிர்தங் கிடைத்தது மன்றி மிகுந்த சுகிர்தமுள்ளவனுனேனென்றுஞ் சொல்லக் கேட்ட குபேரனைவன் அநேகவாத்தியங்களுடன் நாநாவிதமான புட்பங்களை யெடுத்துக்கொண்டு அவ்விலிங்கங்களைப் பூசித்து அநேகரத்தினுபரணங்களுடன் சமுத்திரராசனுல் கொடுக்கப்பட்ட விலை மதிக்கப்படாத இரத்தினுபரணத்தையுஞ் சாத்தினுன். அப்பொழுது சிவபெருமான் இடபவாகனரூடராய்ப் பிரத்தியக்ஷமானூர். அப்பொழுது குபேரன் வணங்கித் துதிக்க குபேரனே நீ நம்மைப் பூசித்ததற்கு மகிழ்ந்தோம். உனக்கு

கிணைத்தனவெல்லாம் உண்டாகுக. நீபூசித்தபடியால் இதுமுதல் இத்தலத்துக்கு அழகாபுரியென்று பெய ருண்டாகுகவென்றருளினர். குபேரனும் தேவிதீர்த் தத்தில் மூழ்கிச் சிவபெருமானைப் பூசித்து அளகா புரியை யடைந்தான். அத்தலத்தி லொருவனேனு மேனும் வசித்தால் அவர்கள் கைலாயத்தை யடைவார்க ளென்பதற்குச் சந்தேகமில்லை.

ஆருவது அத்தியாயம் முற்றிற்று.

---

## எ - வது. அத்தியாயம்.

சௌனகாதி முனிவர்களைப் பார்த்துசூதபுராணி கர் சொல்லுகின்றார்.

சோதி வனத்திலுள்ள காளீபர் சோமேசனென்னு மிரண்டிலிங்கங்களையும் பூசித்துப் பிட்டபாணை னென்பவன் கபிலனுச் செல்லாஞ் சிரேஷ்டனாகி மகா காளாசுபதமென்னுங் கத்தியஞ் செய்தான். அநேக முனிவர்கள் அவ்வனத்திற் றவஞ்செய்து பரமசிவ னிடத்தில் பஞ்சாக்கரவுபதேசம்பெற்றுச் சாயுச் சியபதவி யடைந்தார்கள் நைந்துருவனென்னு முனி வர் நற்குணமுள்ள மனைவியோடு தவஞ்செய்து கொண் டிருக்கையில் அதிரூபவதியான பெண் ணொன்று பிறந்தது. அவரும் கௌதமைநதிதீரத் தில் அநேக முனிவருடன் அக்கினிகோத்திரஞ் செ ய்துகொண்டிருக்க அப்பெண் மலர்கொய்யத் தோழி யருடன் நந்தவனத்திற்குச் சென்றாள். அவளை வாயு

பகவான் கண்டு மோகித்துப் பெண்ணே நீயார் என
க்கு மனைவியானல் உனக்கு மிகுந்த பாக்கியங் கிடை
க்குமென்று சொல்ல அப்பெண் பயந்து முனிவரி
டஞ்சென்று கூற உன்னை நடுங்கும்படி செய்தவன்
தலை நூறுபிளவாய்ப் போகக்கடவ தென்று சபித்தார்
அப்பொழுது வாயு அவ்விடம்வந்து நான்தான் உம்
முடைய பெண்ணை யிச்சித்தேன் பிராம்மணர்கள்
தேவர்களுக்குப் பெண் கொடுத்தாற் குற்றமில்லை.
கோபிக்க வேண்டாமென்று கூற அம்முனிவர் கோ
பித்து என்னநுமதி யில்லாமல் என்பெண்ணை நடுங்
கச் செய்தபடியால் நீ என் சாபத்தை யடையக்கட
வாயென்று கூற அவ்வாயுவும் உன்பெண் பைசாச
மாகக் கடவதென்று சபித்துவிட்டு வெளியிற் செல்
லுமுன் அவன்றலை நூறுபிளவாய்ச் சிதறக் காத்தியா
யன ரிடஞ்சென்று வருத்தத்தோ டிருந்தான் அந்தப்
பெண்ணும் வாயுவினுடைய சாபத்தால் பைசாச
மாகி அம்முனிவரது ஆச்சிரமத்தைச் சுற்றிக்கொண்
டிருந்தாள் அப்போது அகத்தியமுனிவர் உலகசஞ்
சாரஞ் செய்துகொண்டு அவ்விடம்வர அம்முனிவா
கண்டு உபசரித்து என்மனக்குறையை நீக்கவேண்டு
மென்று பிரார்த்திக்க அகத்திய முனிவர் ஓ பிராம
ணரே வைகைக்கு வடகிழக்கில் ஒருயோஜனை தூரத்
தில் பிரமாவினல் பூசிக்கப்பட்ட இரண்டிலிங்கங்க
ளிருக்கின்றன. அதின் பெருமையையும் அத்தலத்தி
லுள்ள பஞ்சதீர்த்தங்களின் மான்மியத்தையும் என்
னல் கூறமுடியாது. அத்தலத்திற்குப் பெண்ணுடன்

ம் காலும் [illegible] வருவேன். மாசிமாதத்தில்
நாதத் விசேடமுண்டு. அப்பொழுது வாயுபகவானை
யும் அவ்விடம் வரவழைக்கிறேன் உம்முடைய பெ
ண்ணின் சாபமும் நீங்கிவிடும். உம்முடைய பெண்
ணும் வாயுவினால் வரிக்கப்பட்ட படியால் அவருக்கே
மனைவியாக வேண்டியது என்று சொல்லிவிட்டு அக
த்தியமுனிவர் சென்றார்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அ - வது. அத்தியாயம்.

சௌனகாதி முனிவர்களைப் பார்த்துச் சூதபுராணி
கர் சொல்லுகின்றார். அந்த நைந்துருவர் அகத்தியர்
சொல்லியபடி பொதிவனத்தை யடைந்து சங்கற்ப
பூர்வகமாகப் பிரமதீர்த்த முதலிய தீர்த்தங்களில்
மூழ்கி அந்தீர்த்தத்தை எடுத்து வாயுவினால் சபிக்கப்
பட்டிருக்கிற பெண்மேல் தெளிக்க அச்சாபநீங்கி முன்
போல சலக்ஷணமுள்ள பெண்ணானாள். அம்முனிவ
ரும் மகிழ்ந்து அகத்தியர் வரவைப் பார்த்துக்கொண்
டிருக்க அகத்தியரும் மாசிமாதப் பூரணைதினத்தில்
வாயுவுடன்வந்து அதில் நீராட வாயுவும் அத்தீர்த்தத்
தில் மூழ்கியவுடன் சாபநீங்கினான். அப்பெண்ணை
அவ்வாயுவுக்கே விவாகஞ்செய்து கொடுக்க வாயுவுஞ்
சந்தோஷத்துடன் தன்னுலக மடைந்தான். அந்த
நைந்துரவரும் தன்பெண்ணின் சாப நீங்கியதினால்

மகவும [illegible]

காலம் வசித்துத் தன்பேரால் ஓர் தீர்த்தமும் ஒரு இலிங்கத்தையுந் தாபித்துப் பூசிக்கச் சிவபெருமான் இடபவாகனத்திற் றோன்றி ஓ பிராம்மணு உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்பாயென்று கூற அம் முனிவர் சிவபெருமானைத்துதித்து ஓ சுவாமி என் பெண்ணுக்குச் சாபவிமோசனமான தினத்திலே எவர் மூழ்கினுலும் சாயுச்சியம் கிடைக்கவேண்டுமென வேண்ட அப்படியே வரமளித்தார். தேவேந்திரன் இவ்விலிங்கங்களுக்கு வடபாகத்தில் அகலிகையால் வந்த சாபநீங்குவதற்குப் பிரதிட்டைசெய்த இலிங்கத்தைச் சத்தியோ சாதமென்றும் சத்தியோமுத்தமென்றும் சொல்லுவார்கள் அவ்விலிங்கத்துத் தென்கிழக்கில் அக்கினியால் பிரதிட்டைசெய்யப்பட்டவிலிங்கமும் காளலிங்கத்துக்கு வடகிழக்கில் அக்கினிகூபமென்று ஒருதீர்த்தமும் காளலிங்கத்துக்கு வாயுமூலையில் இயமனுற் பிரதிட்டைசெய்யப்பட்டவிலிங்கமும் காளலிங்கத்துக்கு வடபக்கத்தில் வருணனுல் பிரதிட்டைசெய்யப்பட்டவிலிங்கமும் இருக்கின்றன. இவ்விலிங்கங்களைப் பூசித்தால பிரமகத்தியாதி சகல பாபங்களும் நீங்கும் என்று சூதபுராணிகர் சொன்னர்.

எட்டாவது அத்தியாய முற்றிற்று.

---

## ௨௯ அத்தியாயம்

சௌனகாதி முனிவர்களைப் பார்த்துச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

முற்காலத்தில் தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலில் அமுதம் கடைந்தார்கள். அப்போது அதிலிருந்து விடமுண்டாகித் தேவர்களை யெரிக்க அவர்கள் சிவபெருமானிடஞ்சென்று எங்களைக் காப்பாற்றுமென்று முறையிட அவ்விடத்தைச் சிவபெருமான் உண்ண அம்பிகை பிரார்த்தனையினால் அதைக் கழுத்திலே நிறுத்திக்கொண்டார். அந்தவிடம் நீலரத்தினாபரணம்போல விளங்கிக் கொண்டிருக்கின்றது. அப்பாற்கடலினின்றும் உச்சைச்சிரவம் என்னுங் குதிரையும் ஐராவதமும் இலக்குமியும் கௌஸ்துபமணியும் சந்திரனும் அறுபதுகோடி அரம்பையர்களும் உண்டானபின் ஈசனருளால் அமுதமும் உண்டாயிற்று.

முற்காலத்திற் பூமியை வகிக்கும்படி கூர்மரூபியான விட்டுணுவையும் சேடனையும் ஐராவதத்தையும் சிவபெருமான் கட்டளையிட்டார். அப்போது அவர்கள் எங்களுக்குப் பூமியைச்சுமக்கத்தக்க பலத்தைக் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபெருமான அவர்களைப்பார்த்து நீங்கள் பூமியை வகிப்பதற்காகவே உண்டானவர்கள். இதுவரையில் எமது சத்தியால் வகிக்கப்பட்டிருந்தது

நீங்கள் புண்ணியதீர்த்தங்களில் மூழ்கி துடன் தபஞ்செய்யுங்களென்று சொல்லிவிட்டு அவர்களுக்கு நீலகண்டமந்திரத்தை யுபதேசிக்கும்படி கட்டளையிட நந்திதேவரும் அப்படியே யுபதேசித்து இம்மந்திரத்தை வைகைக்கு வடபக்கத்தில் சோமேசனுக்கு ஈசானியதிக்கிலுள்ள சுகந்தவனத்திலிருந்து சபிப்பீராயிற் சித்தியையடைவீர்கள் அத்தலமானது கிருதயுகத்தில் தேவதாருவனமென்றும் திரோதாயுகத்தில் சேடபுரமென்றும் துவாபரயுகத்தில் ஞானபுரமென்றும் கலியுகத்தில் ஐராவதபுரமென்றும் பெயர் என்று நந்திதேவர் சொல்லக்கேட்டு அம்மூவரும் சுகந்தவனஞ்சென்று யானைமடுவில் விதிப்படி மூழ்கிக் காளீசரைப் பூசித்து அவ்விடத்திற்றங்கள் பேரால் ஒவ்வொருலிங்கங்களையும் தீர்த்தங்களையுந்தாபித்துத்தவஞ்செய்யும்போது காளீசர் பிரசன்னமாகி அவர்களுக்குப் பூமியைத்தாங்கும் பலமளித்து அவ்வவரிடஞ்செல்லும்படி யனுக்கிரகித்தருளினார். இம்மான்மியத்தைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் வேதபாராயணஞ்செய்த புண்ணியத்தை யடைவார்கள். அன்றியும் இகத்தில் சர்வாபீஷ்டங்களையும் அடைந்து பின்பு சீராந்தத்தில் சாயுச்சியத்தையும் அடைவார்கள், என்று சூதபுராணிகர் சௌநகாதி முனிவர்களுக்குச் சொல்லியருளினார்.

ஒன்பதாவது அத்தியாய முற்றிற்று.

---

சங்கரசங்கிதையிலுள்ள கதை முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காளையார்கோயிற் புராணம்.

## சுந்தரமூர்த்திப்படலம்.

——: :——

நித்த னேயுமை நேசயு வேசனே *
முத்த னேயருட் காளீச முன்னுவார்
சித்த னேசச்சி தானந்த வெம்மனோர்
கத்த னேயெமைக் காத்தருள் செய்கவே.

பல்வளஞ் செறிந்த சோழ நாட்டினிற் பாரு ளோங்கு
நல்வளஞ் செறியு மாரூ ரெனுமணி நகரந் தன்னி
லல்வளஞ் செறியுங் கண்டத் தணிவனை தியாகே சன்பாற்
சொல்வளஞ் செறிந்த வன்பர் சுந்தர மூர்த்தி யென்பார். (க)

பிறைமுடித் தருளும் பெம்மான் பிரதிவிம் பத்திற் றோன்றி
நிறையருட் சைவ பூதி சாதன நெறிமேற் கொண்டோர்
மறையவர் குலம்வி ளங்க வந்தருள் கருணை வள்ளல்
கறைகெழு கண்டத் தோனைக் கனவினுந் துதிக்கு நீரார். (உ)

தலந்தொறுஞ் சென்று சென்று தம்மடி யார்கூட் டத்தோ
டலம்பெறு தமிழ்ப்பா மாலை யங்கணன் றனக்க ணிந்து
நிலம்பல சுற்றி வையை நீருலாம் பாண்டி நாட்டி
னலங்கெழு திருச்சு ழிப்போர் நகரினை யடைந்தார் மன்னோ. (ங)

* உவேசன்—காளையீசன்.

அத்தல முறைபெம் மானை யருச்சித்தங் கணிந்து போற்றி
தத்துநீர் தவழ்குண் டாற்றின் றடங்கரை மடத்திற் றங்கி
நித்திரைசெய்வார் தம்மு னிகழ்தரு கனவிற் பூஞ்சேண்
டத்தன்கா ளீசன் காளை* யாகிமுன் றோன்றி நின்றான். (ச)

ஐயநீர் யாவ ரென்று ரவர்சோதி வனத்து ளேம்யா
மையணி கண்டத் தோனை வளம்படப் பாடு வோய்நீ
துய்யவுள் ளன்பி னோடு துதிக்குக நமையு மென்றான்
பையநித் திரையி னீங்கி விழித்தனா பரிவு பூண்டார். (ரு)

ஆயிடை யிருந்தே காளீ சன்றனை யன்பிற் பாடிச்
சேயிடை யுள்ள தாய திருப்புன் வாயிற் கேக
வேயதோர் முயற்சி யுள்ளத் தெய்தினர் காளீ சன்றான்
வேயுறு தோளி யோடு விளங்கினன் மறையோ னாகி. (சு)

உற்றவர் தம்மை நீவிர் யாவரெங் குள்ளீ ரென்ன
மற்றவை சொல்வோம்பின்னாப்பசிக்கனம் வழங்குகென்றான்
றெற்றெனெ வுண்டி யட்டுத் தேடினர் மறையோற் காணார்
சுற்றினர் திரும்பி வந்து சுந்தரர் நோக்குங் காலை. (எ)

---

* காளை — யுவா-யௌவனபுருஷன்.

"மாரனுமன குருவிலியாய் மறைந்திருந்து நோக்குமெழில்
வாரவிளங் காளையுரு வாகியவ னமர்தவுரி
கேரிவெழுந் தருளியுன தென்னைமென்கொ னிகழ்ந்ததெனப்
பொருணோய் கின்றுனை பெரிதுதலை மேற்கொண்டே."

—காளிபூசனைப்படலம் - 30வது செய்யுள்

பட்டதோ ருண்டி காணு ரண்ணறன் விளையாட் டேன்று
தோட்டேழு முவகை யுற்றார் சோதிமா வனத்தி லேன்னை
யெட்டிய வன்பிற் காணு தேங்குற நினைக்கின் றுயேன்
றெட்டிய வோசை யொன்று விண்ணிடை யெழுந்ததம்மா(௯)

கேட்டன ரந்த வோதை கிளர்சோதி வனத்திற் கிந்தக்
கூட்டமோ டேவ்வா றேகு வோம்பிரான் கூறு மந்தக்
காட்டினைக் கண்ட தில்லை யென்றிவை கருதும் போது
சூட்டிய விடையின்மீது தோன்றினா முன்னர்ச்செல்வோம்(௧௦)

குண்டையின் சுவடு நோக்கிக் கூடிநீ வருக் வென்ற
விண்டயங் கொலிகேட் டங்கு வியந்துநங் கூட்டத் தோடு
பண்டையெம் பெருமான் பின்னர்ப் படர்ந்தனர் படருங்காலை
யண்டர்கோ னருளா லேற்றி னடிச்சுவ டாங்கு காணார். (௧௦)

மயங்கினர் நெருங்கு காட்டில் வழியுண ராது நின்று
தயங்கின ரடிய ரெல்லாஞ் சுந்தரர் தாமு நோக்கி
நயந்துகா ளீசன் றன்னை நண்பொடு துதித்தா ராக
வயங்குமா னடியை நோக்கி வருகென வொளித்தார் பின்னும்
(௧௧

சென்றனர் சில்ல தூர மிலிங்கமாய்ச் செறிந்த வேங்குக்
குன்றடி பெயர்க்கக் கூடாத் துயருறீஇ யொருசா ருள்ள
தோன்றுமோர் நெறியிற் சென்று ரொளிவள வணங்க வெல்லை
கன்றுற நோக்கிச் சென்றார் நம்பனல் விமானங் கண்டார் (௧௨

கண்ணுறக் கோபு ரங்கள் கண்டனர் வணங்கிப் பத்தி
யுண்ணிக ழடியர் கூட்டத் தோடுபூம் புனல்கு டைந்து
நண்ணிய காளீ சன்ற னுடிய புகுந்தா ரங்க
ணண்ணறன் னருளா லந்த வாலய மறையச் செய்தார். (கங)

சுந்தரர் நோக்கிக் காணச் சூழ்ந்தவா லயங்க ளெங்கே
யந்தர மாயிற் றென்றங் கண்ணறன் விளையாட் டுன்னி
முந்துநாங் காளீ சன்றன் முன்னில மதனுல் வந்த
திந்தவா றென்றோர் செய்யு ளிசைத்தனர் துதித்தாரன்றே (கச)

உற்றதோ ரொளியைக் கண்டா ருவந்தனர் துதித்தார் பின்னுந்
தெற்றெனத் துதிக்குந் தோறுஞ் சிகரமுன் னெவ்வோ ரங்கந்
துற்றுமுன் றேன்றச்செய்து துலங்கக்காட் டினன்றன்கோயின்
முற்றவுங் கருணை யுள்ள முதிர்ந்தகா ளீசன் மாதோ. (கரு)

மன்னுசுந் தரர்த மன்பு வயங்குற யார்க்குங் காட்டி
யன்னிலை யெதிர்போந் தெம்மா னளவறுபொருளு நல்கத்
துன்னிய வடியர் கூட்டஞ் சூழ்ந்திட வவணின் றேகிப்
பன்னிய தலங்க டோறும் பாடிய சென்ற ரன்றே. (கசு)

சாற்றுநன் னீர்க்குண் டாற்றின் றடங்கரை யதின்முன்னுற்றுப்
போற்றுசுந் தரர்பால் வந்த புனிதனங் காளீ சன்றன்
பாற்றுலங் கம்மை யோடு மின்னுமப் பதியுள் வாழ்வா
னேற்றமிக் குளவத் தான மான்மிய மேவர் சொல்வார். (கஎ)

---

ஸ்ரீராமஜயம் பிரஸ், திருவண்ணாமலை.

கொன்றை சேர்சடை யான்கொள்ளம் பூதூர்
நன்று காழியுண் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நம்பனை உள்கச் செல்லவுந்துக என்று சிந்தையார் தொழ நம்பனே அருள் நல்குமாறு ! என்று திருவருளைப் போற்றியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கோட்டம் - வாசனைப் பண்டம் ; நம்பனே அருள் நல்குமாறு - என்க. நல்குமாறு - நல்கும் வழி இது. ஆறு - ஆற்றின் கண் ; செல்ல - ஓடம் செல்ல என்ற குறிப்புமாம் ;—(3) விலையிலாட்கொண்ட விகிர்தன்- உயிர்களை அநாதியே ஆளாகக் கொண்டுடைய தலைவன். "தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு" (கழறி. புரா - 131) என்று இக்குறிப்பினை ஆசிரியர் விளக்குதல் காண்க ; நம்பிகளைத் தடுத்தாட்கொண்ட வரலாறும் கருதுக ;—(4) கண் மலரும் - கண்போல மலர்தற்கிடமாகிய ;—(5) பொன் - பொன்போன்ற பூக்களும், இதழ்களும் ;—(6) ஓடம் வந்தணையும் - சரித வரலாற்று விண்ணப்பக் குறிப்பு ; விண்ணப்பமாகக் கேளாது இயல்பு குறித்த தன்மையணியில் வைத்துக் கூறியநிலை காண்க. "குரும்பை யாண்பனை யீன்குலை ஓத்தூர்" முதலியவை கருதுக. மேற்பாட்டில் "ஆறுவந் தணையும்" என்றதும் இக்குறிப்பு. பதிக முழுதும் பொதுவாகவும் இவை சிறப்பாகவும் சரித வரலாற்றின் அகச்சான்றுகளாதலும் காண்க ;—(9) பருவாளுகளும் - நீர்ப்பெருக்குக் குறித்தது ; "நீரகக் கழனி" (10) ; "கோட்டகக் கழனி" (2) என்பனவுமிக்குறிப்பு.

குறிப்புக்கள் :—(1) இப்பதிகம் திருக்கொள்ளம்பூதூர் இறைவரை ஆற்றின் இடையே உய்த்த தோணியின் இருந்தபடி பாடியருளியது ; மேற்பாட்டில் (2798) போற்றி செய்தார் என்றதனுற் கருதப்படும் பதிகம் கிடைத்திலது.

(2) ஈரடி மேல்வைப்புஎன்றது பதிக யாப்பமைதி குறித்த பெயர், பதிகம் ஈரடியாலமைந்த தாழிசை விருத்தத்தின்மேல் மகுடவைப்பாக வைத்த "செல்ல வுந்துக......நம்பனே" என்ற இரண்டடிகளை உடையது. இவ்வாறு மேல்வைப்பாக வருவன இங்குப்போல ஒன்றேபட வருவனவும், திருப்பூந்தராய் ஈரடிமேல் வைப்புப் பதிகத்திற்போல வேறுபட வருவனவும் உண்டு. திருவாவடுதுறைப் பதிகக் குறிப்பிற் கூறியவை பார்க்க (2323).

தலவிசேடம் :—திருக்கொள்ளம்பூதூர் - காவிரித் தென்கரையில் பாடல் பெற்ற தலங்களுள் 113-வது பதி ; வில்வவனம் என்று கூறுப. திருக்களம்பூர் என்று வழங்குவது ; ஆளுடைய பிள்ளையார் ஆற்றின் வெள்ளத்துள் பதிகம் பாடி ஓடம் செலுத்திவந்து வழிபட்ட தலம். வரலாறு புராணத்துள் முன் உரைக்கப்பட்டது. இவ் வரலாறு பதிகத்து 6 - 7 பாட்டுக்களினும் குறிக்கப்பட்டுள்ளது. அழகிய திருப்பணி முற்றிப் பெருஞ் சாந்தியும் அணிமையில் நிகழ்ந்துள்ளது. பிள்ளையார் ஓடம் செலுத்தியதுபற்றிய விழா ஆண்டுதோறும் கொண்டாடப்பெறுகின்றது. சுவாமி - வில்வ வனநாதர் ; அம்மை - சௌந்தர நாயகி ; மரம் - வில்வம் ; பதிகம் 1.

இது கொரடாச்சேரி நிலையத்தினின்றும் வடக்கில் கற்சாலை வழி 5½ நாழிகை யளவில் உள்ள செல்லூரை அடைந்து அங்குநின்றும் மேற்கே 1 நாழிகையளவில் அடையத்தக்கது.

*2798 நீணிலைக் கோபுரமதனை யிறைஞ்சிப் புக்கு
நிகரிலாத் தொண்டருட னெருங்கச் சென்று
வாணிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி
மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று
"தாணுவே! யாற்றின்க ணோடை முய்க்குந்
தன்மையா லருடந்த தலைவா! நாகப்
பூணினாய்! களிற்றுரிவை போர்த்த முக்கட்
புனிதனே!" யெனப்பணிந்து போற்றி செய்தார்.  கூ00

(இ - ள்) வெளிப்படை. நீண்ட நிலைகளையுடைய திருக்கோபுரத்தினை வணங்கித் திருவாயிலினுட் புகுந்து, ஒப்பற்ற திருத்தொண்டர்களுடன் கூட நெருங்கிப்போய், ஒளி பொருந்திய திருக்கோயிலினை வலங்கொண்டு சேர்ந்து, பிறையினை சூடிய சடையினையுடைய பெருமானின் திருமுன்பு நின்று "தாணுவே! ஆற்றினிடையே ஓடத்தினைச் செலுத்தித் தந்தருளிய தன்மையினாலே அருள் தந்த தலைவரே! நாகங்களைப் பூணாகவுடையவரே! யானையினது உரிவையினைப் போர்த்த முக்கட் புனிதரே!" என்று பணிந்து துதித்தருளினார்.

(வி - ரை) பதிகம் பாடி ஆற்றின ஓடத்தினை செலுத்திக் கோயிலைச் சேர்ந்த பின்பு பிள்ளையார் அங்கு வழிபட்ட சிறப்புக கூறுவது இத்திருப்பாட்டு.

தாணு - தாங்குபவர்; "வயிரத் தூணே" (தேவா); நிலைபெற்றவர் என்றலுமாம்.

தலைவா - சார்வாக அடைந்தாரைக் காக்கும் தன்மை தலைவர்க்குரியது. "விலையிலாட்கொண்ட விகிர்தனே" (பதிகம் - 3).

நாகப்பூண் - களிற்றுரிவை - பெரிய இடையூற்றையும் விலக்கி ஒழித்தலும், தீமையினையே நன்மையாக்குதலுமாகிய ஆற்றல்களைக் குறித்தன. "ஆடல பேணிய அடிகள்" (பதிகம் - 6).

களிறுரித்தல் முதலிய வீரச் செயல்கள் கருணையை பெருக்காற் செய்யப்பட்டனவாதலின் இறைவரது தூய தன்மைக்குப் பங்கமில்லாமை கூறுவார் போர்த்த முக்கட் புனிதனே என்றார்.

போற்றி செய்தார் - ஆற்றினிடையே தோன்றாத்துணையாய் நின்ற அற்புதராதலால் இவ்வாறு நினைந்து நினைந்து கோயிலில் திருமுன்பு போற்றி செய்தனர். கடலினிடையே பதிகம் பாடிக் கல்லே மிதப்பாக மிதந்து கரையேறிப் போந்த அரசுகள் திருப்பாதிரிப் புலியூரில் புகுந்து இறைவரது திருமுன் "ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி" என்றெடுத்தது "தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே" எனப் போற்றிய நிலை ஈண்டுக் கருதத் தக்கது.

போற்றி செய்தார் - திருமுன் போற்றிய இப்பதிகம் கிடைத்திலது!
பரவிப் போற்றல்—என்பதும் பாடம்.  900

2799. போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையு நாளிற்
பூழியன்முன் புன்சமயத் தமணர் தம்மோ
டேற்றபெரு வாதின்க ணெரியின் வேவாப்
பதிகமுடை இறையவரை யிறைஞ்ச வேண்டி,

ஆற்றவுமங் கருள்பெற்றுப் போந்து முன்ன
மணைந்தபதி களுமிறைஞ்சி யன்பர் சூழ
நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி
நாடுடைநா யகர்கோயி னண்ணி னாரே. ௬௦௧

(இ - ள்) போற்றிசைத்து...நாளில் - போற்றி செய்து புறத்திற் போந்து அப் பதியினில் தங்கியருளிய நாளிலே; பூழியன்முன்...வேண்டி - பாண்டியனது முன்னிலையில் புல்லிய சமயத்தவராகிய அமணர்களுடனே மேற்கொண்ட பெரிய வாதத்திலே தீயினிடை வேவாது இருந்து வெற்றி தந்தருளிய திருப்பதிகத்தின் நாயகராகிய திருநள்ளாற்றின் இறைவரைச் சென்று வணங்கவேண்டி; ஆற்றவும்...போந்து - அப்பதியில் இறைவர்பால் மிக வேண்டி அருள்விடைபெற்றுப் போந்தருளி; முன்னம்...இறைஞ்சி - வழியிடையே முன்னர்ச் சென்று வணங்கிய பதிகளையும் மீண்டும் வணங்கிக்கொண்டு; அன்பர் சூழ...நண்ணினாரே - அன்பர் கூட்டம் சூழ்ந்துவரச் சென்று நாற்றிசையும் போற்றிசெய்யும் திருநள்ளாற்றினை அடைந்து நாடுடை நாயகரது திருக்கோயிலினைச் சேர்ந்தருளினார் (பிள்ளையார்).

(வி - ரை) போற்றிசைத்து - திருப்பதிகம் பாடித் துதித்து.

அங்கு உறையும்நாளில்-சில நாள்கள், அத்திருப்பதியில் (திருக்கொள்ளம்பூதூரில்) பிள்ளையார் எழுந்தருளியிருந்தனர் என்பது.

பூழியன் முன்...இறையவர் - பச்சைப் பதிகம் என்ற "போகமார்த்த பூண்முலையாள்" என்று திருநள்ளாற்றுப் பதிகத்தாற் போற்றப்படும் தலைவராகிய நாயகர்; நள்ளாற்றிறைவ ரருளின வரலாறு பற்றி 2672 முதல் 2690 வரை பாட்டுக்கள் பார்க்க.

அங்கு - திருக்கொள்ளம்பூதூர் இறைவரிடம்.

ஆற்றவும் அருள் பெறுதலாவது - பிரியலாற்றா நிலைமையால் மிக வேண்டி அரிதில் விடைபெறுதல். இங்குத் தங்கியதும் இறைவர் ஈண்டு ஆற்றில் ஓடம் உந்தித் தம்மை வந்து வழிபட அருளிய கருணையின் நன்றிபற்றி. இனி, அங்குத் திருநள்ளாற்றிற் செல்ல எண்ணுவது அதுவேபோல, முன்னர் ஆலவாயில் எரியினிடை வேவாது காட்டித் தம்மை அருளிய திறத்தின் நன்றிபற்றி. ஆதலின் இரண்டும் நன்றியாகிய ஒருகருத்தே பற்றி எழுதலின் இங்குநின்று நீங்க ஆற்றவும் வேண்டி அருள்பெற்றனர்.

இறைஞ்ச வேண்டி - காவலனார் பெருங்கருணை, அரசன் முன் அமணர் வாதினில் வெல்லக் கைதந்த நன்றியின்பொருட்டு மீளச் சென்று வணங்கவேண்டி.

முன் அணைந்த பதிகளும் இறைஞ்சி - இவை திருக்கொள்ளம்பூதூருக்கும் திருநள்ளாற்றுக்கும் இடையே பிள்ளையார் செல்லும் வழியில் உள்ளவை; இவை திருக்குடவாயில், திருவாஞ்சியம், திருவம்பர், திருப்புகலூர் முதலாயின என்பது கருதப்படும்.

நாற்றிசையும் பரவும் - கலி தொடர்வுற்ற மாக்கள் பலரும் எத்திசையினின்றும் போந்து வரங்கிடந்து கலிநீங்கப் பெறுதல் இன்றும் காணவுள்ள தன்மைக் குறிப்பு; திருப்புள்ளிருக்குவேளூர் ஸ்ரீ வைத்தியநாதர் கோயில்போல.

நாடுடை நாயகர் - இப்பதியின் சுவாமி பெயர். எல்லா நாடுகளிலும் வழிபாடு விளங்கும் நாயகர். சோழ நாட்டினிற்போலப், பாண்டிநாட்டினும் விளங்கி, அமணரது அனல்வாதத்தின்கட் போந்து அருளிய குறிப்பும் தருவது.

2800. நீடுதிருத் தொண்டர்புடை சூழ வங்கண்
 நித்திலயா னத்திடைநின் றிழிந்து சென்று
பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப்
 பிறையணிந்த சென்னியார் மன்னுங் கோயில்
மாடுவலங் கொண்டுள்ளால் மகிழ்ந்து புக்கு
 மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப்
"பாடகமேல் லடி"யெடுத்துப் பாடி நின்று
 பரவினார் கண்ணருவி பாய்ந்து பாய. ௬௦௨

(இ - ள்) நீடு...சென்று - நீடுகின்ற திருத்தொண்டர்கள் பக்கத்திற் சூழ்ந்துவர அவ்விடத்து முத்துச்சிவிகையினின்றும் இறங்கிப் போய்; பீடுடைய.....புக்கு - பெருமை பொருந்திய திருவாயிலினைப் பணிந்து உள்ளே புகுந்து; பிறையணிந்த... ...புக்கு - பிறையினைச் சூடிய சென்னியையுடைய இறைவர் நிலைபெற்று வீற்றிருக்கும் திருக்கோயிலின் உட்பக்கங்களில் வலமாக வந்து மகிழ்ச்சியுடனே உள்ளே புகுந்து; மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி - மலர்போன்ற கைகளைக் கூப்பி வணங்கி; வள்ளலாரை...பாய - வள்ளலாராகிய இறைவரைப் "பாடக மெல்லடி" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியருளி நின்று கண்களினின்றும் கண்ணீர் அருவி பெருகத் துதித்தருளினார்.

(வி - ரை) இத்திருப்பாட்டுப் பிள்ளையார் திருநள்ளாற் றிறைவரை வழிபட்ட சிறப்புக் கூறியது; 2798 போலக் காண்க. திருவாலவாயினில் அரச சபைமுன் உண்முகமாகவே போந்தருளி யிருந்து துணைசெய்த பேரருட்டிறத்தினையே நினைந்த ஆராமையால் செய்த வழிபாடாதலின் இத்துணைச் சிறப்பும் விரித்தபடி; பதிகம் பார்க்க.

பாடக மெல்லடி - பதிக முதற்குறிப்பு.

பரவுதல் - ஆலவாயின்கண் வந்தமர்ந்தருளிய அருட்பெருக்கினை ஒவ்வொரு திருப்பாட்டினும் மகுடமாகவே வைத்துப் போற்றுதல். பரவியவாறு மேற்பாட்டில் விரிக்கப்படுதல் காண்க.

பாடக மெல்லடி - "போகமார்த்த பூண்முலையாள்" என முதற்பதிகத்திற் றொடங்கிப் போற்றிய வகையே, அத்திருப்பதிகம் வரைந்த ஏட்டினை முன்வைத்து மதுரையில் அரசன் முன்னர் அருளிய அத்திருப்பதிகத்திலும் "தளிரிள வளரொளி யுமை" என்று தொடங்கியும், மீண்டும் இங்கும் அவ்வாறே "பாடக மெல்லடிப் பாவை" என்று தொடங்கியும் இவ்வாறு மூன்றுமுறையும் ஒன்றுபோலவே அருளிய குறிப்பு இங்கு இறைவரது அருட்சத்தியாரது வெளிப்பாடு குறித்தது; "மூல பிணையவை குலவலின்...இவை பழுதிலை" என்று காரணக் குறிபட அருளியதும் கருதுக.

வள்ளலாரை - சோணாட்டினின்று அமணர் வாதத்தினுள் பாண்டி நாட்டிற் றாமே வெளிப்பட்டு வந்தருளிய வள்ளன்மை குறிப்பு; அமண் களை நீக்கிச் சைவ விளக்கம் கண்டு பாண்டி நாட்டினின்றும் சோணாட்டுக்கு மீண்டருளிய பிள்ளையார், சோணாட்டில் அதுபற்றி நினைந்து சென்று தொழுத பதி இதுவேயாம். "நள்ளாறுடைய நம்பெருமான்! ஆலவாயின்கண் அமர்ந்தவாறு இது என்கொல்?" என்ற பதிகம் ஆளுடைய பிள்ளையாரது திருவுள்ளக் குறிப்பினை விளக்குகின்றது; அதனை